3. பணம் சம்பாதிக்கும் நிலையடைந்த பிள்ளைகள் தங்கள் பெற்றோருடன் தகராறு செய்கின்றனர்.

**மன ஆரோக்கியப் பணியில் நம் அரசாங்கம் அல்லது நிர்வாகத்தினர் செய்ய வேண்டுவன :**

இதில் தனிப்பட்ட துறைகள் அமைய வேண்டும். மன நோய் மருந்தகங்கள், குணமாக்கமுடியாத மன நோயாளிகளின் மருந்தகங்கள், ஒவ்வொரு மாவட்டங்கள் வட்டங்களில் வந்து போகும் மன நோயாளிகளுக்கான மருந்தகம், இத்துடன் குழந்தைகளுக்கான வழிகாட்டும் மருந்தகங்கள், குற்றம் புரிந்த குழந்தைகளுக்கான விடுதிகள், பின் தங்கிய குழந்தைகளுக்கான தனிப் பள்ளிகள் ஆகியன அமைக்க வேண்டும்.

மேலும் கர்ப்பம் தரித்த, பிரசவித்த பெண்களுக்கு வழிகாட்டவும், ஆலோசனை கூறவும், சுகாதார பார்வையாளர், செவிலியர், மருத்துவர்கள் கொண்ட மருத்துவப் பகுதிகள் அமைத்தல் வேண்டும்.

குழந்தைகளின் ஒழுங்குப் பிரச்சனைகளைக் கவனிக்க பெண் சுகாதாரப் பார்வையாளர்கள், ஆசிரியர்கள், பள்ளி மருத்துவ அதிகாரிகள் ஆகியோர்கள் நியமித்தல் வேண்டும். இத்துடன் மனோ தத்துவ நிபுணர்கள் உதவி கொண்டு படிப்பிலும் பின் தங்கிய மாணவர்களுக்கும், மாணவியர்களுக்கும் அதன் காரணத்தை ஆராய்ந்து, அக் குழந்தைகள் முன்னேற உதவி செய்தல் வேண்டும்.

மன நோய் பகுதியில் மனோ தத்துவ நிபுணர்களை நியமித்தல் வேண்டும். சமூகத்தில் இவர்களுக்கென சங்கங்கள், பணியாட்கள், வானொலி, செய்தித் தாள்கள், புகைப் படங்கள் மூலமாக இவர்களுக்கு நன்மைகளைச் செய்தல் வேண்டும். இதனால் இவர்களுக்கு மன ஆரோக்கியத் தன்மை வலுவடைந்து மன நோயிலிருந்து விடுபடுவதுமல்லாது, மன நோய் வந்தாலும் எளிதில் தீர்த்து விடலாம்.

**உடல் கூறில் சுகாதாரத்தின் சிறப்புத் தன்மை :**

மனித வாழ்க்கையில் ஒவ்வொரு மனிதனும் அன்றுடம் செய்யும் காரியங்கள் பிரச்சனைகள் அனைத்தும் முறையோடு நடக்கப்பட்டால் மனித வாழ்க்கையும் அத்துடன் சமுதாயமும் சீர்பெறும் உணவுப் பழக்க வழக்கங்கள், சுற்றுப்புற சூழ்நிலைகள், தேக ஆரோக்கியம். பூமியின் நிலை மாற்றம் இவைகளின் சூழ்நிலைகள் சரியாக அமையப் பெற்ற வாழ்க்கையினைக் கொண்டு சென்றால் மன நோய் மட்டுமல்ல, எந்த நோயும் அணுகாது என்பது திண்ணம். இதை நம் மூதாதையர் "வரும் முன் காப்பது மேல்" என்று கூறுகிறார்கள். அவ்வாறு வருமுன் காக்கப்படாவிடில் உடல் [கூறு] பாதிக்கப்பட்டு மனநிலை கெட்டழிய வேண்டிய நிலை ஏற்படும். ஆகவே வரும்முன் காத்தல் வேண்டும். நான் என்ற அகங்காரத்தை ஒழித்து, நாம் என்று கூறி, நம் மருத்துவத்தின் சிறப்பினை எடுத்தோம்பி மக்களுக்கு தொண்டு செய்ய வேண்டும்.

# எருவாய் முளை (Haemorrhoids)

## (மூலம்)

Dr. புது. செயப்பிரகாசு நாராயணன், B. I. M., II M. D.
Dr. வி. சுப்பிரமணியன், B. I. M., II M. D.

**இயல் :**

எருக்குடல் மற்றும் எருவாயைச் சுற்றி (Anorectal Region) அமைந்திருக்கின்ற நாளங்களின் இயற்கைக்கு மாறுபட்ட விரிவே (Dilatation) எருவாய் முளை அல்லது மூல முளை எனப்படும்

**நோய் வரும் வழி: (Aetiology)**

"அனில பித்த தொந்த மலாது மூலம் வராது" - தேரர்.

"காயத்தில் மூலங் கண்ட விதங் கேளு
பாயொத்த தீபனம் பரிந்தே அடக்கினும்
மாயை மயக்க மலத்தை அடக்கினும்
ஒயுற்ற குண்டலிக் குட்புகும் வாயுவே"
"வாயு புகுந்து மலத்தோடு
அபானத்தைத்
தேயுவைக் கூட்டித் திரட்டிச் சுருக்கிடும்
தோயும் மலம்வரின் சுருக்கி முன்னே
நின்(று)
ஏயும்முளைபோல் அபானன் இறுக்குமே"

**பொழிப்புரை:**

பசித் தீயை அடக்குவதனாலும், மலத்தை அடக்குவதாலும் கேடுற்ற வாயு குண்டலியினுள் புகும். அவ்வாறு புகுந்து எருவாயில் வெம்மையை மிகச் செய்து எருவாயைச் சுருங்கச் செய்யும். அபானனுடைய இறுக்கத்தால் மலம் கழிக்கின்றபோது முளை வெளிப்படும்.

**தற்கால நோக்கு:**

வயது: 20 வயதிற்கு முன்னால் மிகவும் அரிதாகவே காணப்படுகிறது.

**பாரம்பரியம் (Hereditary)**

ஒரே குடும்பத்தைச் சேர்ந்த பலருக்கு ஏற்படுகிற நிலை காணப்படுகிறது. அத்தகையோரின் நாளங்கள் பிறவியிலேயே வலுக்குறைவான சுவரினைப் பெற்றிருக்கலாம், அல்லது இயற்கைக்கு மாறுபட்ட விதத்தில் அவர்களுடைய எருவாய் நாடிச் சாலம் (Rectal Plexus) மிகுதியான நாடிகளைப் பெற்றதாக அமைந்திருக்கலாம்.

**வெளிப் பாட்டியல்: (Morphology)**

நான்கு கால் விலங்கினங்களில் நாளக்குருதியானது எருக்குடலில் அழுத்தத்தை ஏற்படுத்தாதவாறு புவியீர்ப்பு விசை உதவுகிறது. ஆகவே அவற்றின் நாளங்களுக்குக் கதவங்கள் (Valves) தேவையிருப்பதில்லை. ஆனால் மனிதனின் நிமிர்ந்த நிலையினாலும் எருக்குடல் குருதி நாளங்களில் கதவங்கள் இல்லாதிருப்பதாலும் அழுத்தம் (Venous Pressure) அதிகமாக உள்ளது. இவ் வழுத்தம் முளைதோன்றுவதற்குத் துணை செய்கிறது. ஆனால் சிற்சில நிலைகளில் மிகவும் கொழுத்த, முதிய நாய்களில் எருவாய் முளை மிகவும் அரிதாகக் காணப்படுகிறது.

உடற்கூறு: (Anatomical)

எருக்குடலில் மேல் நாளத்தின் கிளைகளின் தொகுப்பு சளி சவ்வின்கீழ் அமைந்துள்ள இணைப்புத் திசுக்களில் தாங்குதலற்றுக் கிடக்கின்றன. இவை கள் பேசித் திசுக்களுக்கு ஊடாகச் செல் வதால் மலங்கழிக்கின்ற வேளையில் சுருங்குதலுக்கு இலக்காகின்றன. எருக் குடல் மேல் நாளங்கள் வேசக நாளத் தின் (Portal Veins) கிளைகளாக அமைந்து இருப்பதால் அவற்றில் கதவங்கள் (Valves)கிடையாது. ஆகவே இயல்பாகவே நாளக்குருதி அழுத்தம் மிகுவதற்கு வாய்ப்புண்டு.

மிகுதிப்படுத்தும் காரணங்கள்:(Exciting Causes)

நாட்பட்ட மலச்சிக்கலினால் பிணிக் கப்பட்டு மிகுந்த முயற்சியுடன் மலங் கழிப்பதும், ஆற்றல்வாய்ந்த பெருமலம் போக்கிகளை (Purgatives) உட்கொண்ட தால் மிகுந்த முக்குதலுடன் மலம் கழிப் பதும் எருவாய் முளை நோய் ஏற்படு வதற்கான வலுவான காரணங்களாகக் கருதப்படுகின்றன. சில வேளைகளில் சிறுகுடல் அழற்சி (Enteritis), பெருங் குடல் அழற்சி (Colitis) ஆகியவற்றில் ஏற்படும் கழிச்சலினாலும், சீதக் கழிச்சல் (Dysentry) கடுப்புக் கழிச்சல் ஆகிய வற்றினாலும் மறைவாக அமைந்து கிடந்த (Latent Type), எருவாய் முளை மிகுதிப்படுவதுண்டு.

தனி நோயா? குறி குணமா?

எருவாய்முளை தனி நோயாகவும் தோன்றலாம். தனிநோயாக ஏற்படாமல் சில நிலைகளில் குறிகுணமாகவும்தோன்ற லாம். எருவாய் முளையைத் தனது குறி குணமாகக் கொண்டிருக்கின்ற நோய் களில் ஒன்று எருக் குடலில் தோன்றும் புற்று நோய். இப்புற்று எருக்குடலின் (Rectum)மேல் நாளத்தில்அழுத்தத்தை ஏற்படுத்துவதனாலோ அல்லது குருதிக் கட்டியினாலோ (Thrombosis) எருவாய் முளையைத் தோற்றுவிக்கலாம்.

பெரும்பாலும் எருக்குடல் லகரச் சந்திப்பில் (Recto Sigmoid Junction) தோன்றும் கழலைகளின் குறிகுணமாக மேற்சொன்ன எருவாய்முளை தோன்றக் கூடும்.

மகளிர்க்குச் சூல் காலத்தில் கருப்பையின் அமுக்கத்தினாலும், ப்ரோஜெஸ்ட்ரான் (Progestron) என்ற சுரப்பினால் (Harmone) நாளச் சுவர் களின் மென் தசைகளில் ஏற்படும் மாறுபாடுகளினாலும் குறிகுணமாக எருவாய் முளைகள் தோன்றுகின்றன.

நீண்ட நாட்களாகத் தொடர்ந்து வரும் மலச்சிக்கலினாலும் சிறு நீர்த் தாரையில் ஏற்பட்டிருக்கும் சுருங்க லினால் (Stricture Urethra) முக்கிக் கொண்டு மிகுந்த முயற்சியுடன் சிறுநீர் கழிப்பதனாலும் எருவாய் முளை தோன்றும்.

வேசக நாளக் குருதி அழுத்த மிகுதி யினாலும் (Portal Hypertention) எரு வாய் முளை தோன்றக்கூடும் என்று சிலர் கருதுகிறார்கள்.

ஆனால் பெரும்பாலானவர்களில் மூலமுளை தனி நோயாகவே தோன்று கிறது. அது பற்றிய விளக்கத்தைக் காண்போம்.

முற்குறி குணங்கள் :
(Premonitary Symptoms)

"காணப்பா வாயுவாலுங் கனத்தந்த
வபானன் தன்னைப்
பாணப்பா மலத்தைக் கட்டிப்புகை
யெனக் கறுக்கி நாளுந்
தோணப்பா முளையைப் போலச் சுருக்கி
முன் மலந்தான் வீழல்
ஆண்டா அபானன் தன்னை அழுத்தவே
இறுக்கும் பாரே"

"மூலமே எழுந்தபோது மூலத்தில்
கனல்தான் மீறும்
மூலமே எழுந்தபோது முனைவிந்து நாச
மாகும்
மூலமே எழுந்தபோது முழங்கவே
இரைச்சலாகும்
மூலமே எழுந்தபோது முகிலில்லாக்
கழிச்சல் தானே"

**பொழிப்புரை ;**

வளிக்குற்றம் தன்னளவில் மிகுந்து கீழ்நோக்குங் காலைக் கேடடையச் செய்வதால் எருவைக் கட்டி புகையைப் போல் கறுக்கி இறுகச் செய்து கழிப்பதில் சிக்கலை விளைவிக்கும். எருவாயானது வெம்மையால் எரியும். விந்து நட்டம் ஏற்படும். கீழ் வயிற்றில் இரைச்சல் உண்டாகும். சிலவேளை மலமானது கட்டிப் படாமல் கழிச்சல் காணும்.

**நோய் எண்;**

**சித்தர் நோக்கு ;**

சித்த மருத்துவத்துறையில் மூலம் 21 வகையாகக் கூறப்பட்டிருக்கிறது. அவை 1. எருவாய் நீர்முளை 2. எருவாய்ச் செண்டு முளை 3. எருவாய்ப் பெருமுளை 4. எருவாய் சிறுமுளை 5. எருவாய் வறள் முளை 6. குருதிமுளை 7. சீழ்முளை 8 ஆழிமுளை 9. தமரக முளை 10. வளிமுளை 11. அழல்முளை 12 ஐயமுளை 13. முக்குற்றமுளை 14. வினைமுளை 15 மேகமுளை 16. குழிமுளை 17 கழல்முளை 18. குதமுளை 19. வெளிமுளை 20. சுருக்குமுளை 21 சவ்வுமுளை.

**தற்கால நோக்கு ;**

மூல முளை எருவாயில் உட்பகுதியிலோ (Internal) அல்லது புறப்பகுதியிலோ (External) ஏற்படலாம். உட்பகுதியில் ஏற்படுபவை சளி சவ்வினால் (Mucousmembrane போர்த்தப்பட்டிருக்கின்றன. புறப்பகுதியில் ஏற்படுபவை தோலால் போர்த்தப்பட்டிருக்கிறன. இரண்டும் சேர்த்துக் காணப்பட்டால் உள்-வெளி மூலம் (Intero-External Haemorrhoids) என்றழைக்கப் படுகின்றது.

உள் வெளி மூல முளையும் (Intero-External Haemorrhoids) உள் மூலம் என்ற பாகுபாட்டின் கீழ் அடங்கும். ஏனெனில் இத்தகைய மூல முளைகள் முதலில் எருவாய் உள்நாளங்களின் விரிவினால்தான் உருவெடுக்கின்றன. ஆனால் இந்நாளங்கள் எருவாயின் வெளி நாளங்களோடு தொடர்வதால் முதலில் ஏற்பட்ட விரிவிற்கு இவைகளும் இலக்காகின்றன.

**குறி குணங்கள் :**
**(Clinical Features)**

தொடக்கமாக அமைந்துள்ள தலையாய குறிகுணம் குருதிப்போக்கேயாகும். தொடக்கத்தில் குருதிப் போக்கு குறைவாக இருக்கிறது. குருதி நல்ல சிவப்பாக இருக்கும். மலம் கழிக்கின்ற போதே முளை வெளியாகும். இவ்வாறு பல மாதங்கள் முதல் ஆண்டுகள் வரை தொடரக்கூடும்.

மலம் கழிக்கின்றபோது எருவாய்ச் சுருக்கி பேசியினுல் (Sphincter Ani) அமுக்கப்பட்டு வெளியிலே பிதுக்கமாக அமைந்துள்ள முளை "முதல் நிலை எருவாய் முளை" (First Degree Haemorrhoids) எனப்படும். அவற்றின் குறிகுணம் குருதிப் போக்கு ஒன்றே யாகும். விரிவடைந்த நாளங்கள் எருவாய்ச் சுருக்கி பேசியினுல் அமுக்கப் படுகின்றபோது ஏற்படுகின்ற கிழிவினுல் இத்தகைய குருதிப் போக்கு நேரிடுகிறது.

பிதுக்கம் (Prolapse) மிகவும் பிந்தி ஏற்படக்கூடிய குறிகுணம். தொடக்கத்தில் பிதுக்கம் சிறியதாகவும், மலம் கழிக்கும்போது மட்டுமே ஏற்படுவதுமாக இருக்கிறது. இந்நிலையில் இயற்கையாகவே சுருங்கி விடுகிறது. நாட் செல்லச் செல்ல அவை இயல்பாகச் சுருங்குவதில்லை. நோயாளி விரலினுல் அவற்றினைத் தள்ள வேண்டியதிருக்கிறது

மலம் கழிக்கின்றபோது வெளியே பிதுங்கி, ஆனுல் அதே வேளை விரலினுல் தள்ளினுல் மட்டுமே சுருங்குகின்ற நிலையில் அமைந்துள்ள முளை "இரண்டாம் நிலை எருவாய் முளை" (Second Degree Haemorrhoids) எனப்படும்

இன்னும் நாட் செல்லச் செல்ல, மலம் கழிக்கின்றபோது மட்டுமல்லாது நோயினன் சோர்வடையும் நிலையிலும் மிகுந்த முயற்சியுடன் பணிகளில் ஈடுபடும்போதும் பிதுக்கிக்கொள்வதுண்டு. நிலையாகப் பிதுக்கிக் கொண்டிருக்கின்ற முளை "மூன்ரும் நிலை எருவாய் முளை" (Third Degree Haemorrhoids) எனப் படும்.

இந்நிலையில் எருவாய்முளையானது நோயாளிக்குக் கடுமையான நோவினையும் ஒரு பளுவான அழுத்தத்தையும் ஏற்படுத்துகிறது.

**கசிவு :** (Discharge)

பிதுங்கிக் கொண்டிருக்கின்ற முளையிலிருந்து சளிக் கசிவு (Mucoid Discharge) பெரும்பாலும் ஏற்படுவதுண்டு. உப்பியிருக்கின்ற சளிச் சவ்விலிருந்து இக்கசிவு நேரிடலாம் இந்தக் கசிவைத் தொடர்ந்து பெரும்பாலும் அரிப்பு (Pruritis) நேரிடுகிறது. சிக்கல்கள் (Complications) ஏற்படாத நிலையில் வலி தோன்றுவதில்லை.

**கணிப்பு :** (Diagnosis)

**பார்வைத் தேர்வு :**

பார்வைத் தேர்வின்போது உள் முளை இருப்பதற்கான சான்றுகள் புலப்படாமலிருக்கலாம். முதல் நோயாக ஏற்படும் எருவாய் முளை நோய் மிகவும் முதிர்ந்த நிலையில் புறத்தேயுள்ள தோலில் தொடர்ச்சியான மடிப்புகள் காணப்படலாம். நோயாளி முக்குகின்ற வேளையில் உள்முளைகள் பார்வைக்கு நன்கு புலப்படும். ஆனுல் அவை மூன்ரும் நிலை முளையாக இருந்தால் பிதுங்கியவை பிதுங்கியபடியே நின்று விடுகின்றன.

**தொட்டறிதல் :** (Palpation)

குருதிக்கட்டு (Thrombosis) ஏற்பட்டிருக்கின்ற நிலையில் சில வேளைகளில் உள்முளைகள் விரல்களில் தட்டுப்படுவது உண்டு. மிகவும் பெரிய முளைகள் எளிதில் தட்டுப்படும்.

**எருக்குடல் நிலையறி கருவியால் ஆய்தல்:** (Proctoscopy)

இக்கருவியின் துணை கொண்டு முளை எருக்குடலின் எந்தப் பகுதியில் எவ்வாறு அமைந்திருக்கிறது என்பதைக் கண்டறியலாம்.

**சிக்கல்கள் ; (Complications)**

எருவாய்ச் சுருக்கி (Anal Sphincter) பேசியின் இசிவின் விளைவாகப் பிதுக்கத்தைத் தொடர்ந்து சுருங்கா நிலை (Irreduciblity) ஏற்படலாம். ஆனால் முளையானது வீங்கி நோயினை ஏற்படுத்தும் நாளங்களில் குருதிக்கட்டி ஏற்பட்டு அதன் விளைவாக நாடிக் குருதிச் சுற்றோட்டத்தில் தடை (Strangulation) ஏற்படலாம். தொற்று (Infection) அழுகுதல் (Gangrene) புண்ணுதல் போன்ற சிக்கல்களும் ஏற்படக் கூடும். மிகக் கொடிய விளைவாக தொற்று மேலும் பரவுவதால் வேசக நாள அழற்சி (Pylephlepitis) சீழ்க்கோர்த்தல் (Pyemia) ஆகியவை ஏற்படக் கூடும். குருதி கட்டிய முளைகள் கரடாவதால் எருக்குடல், சளிச் சவ்வில் கிழிவுகள் உண்டாகி வெடிப்பினைத் (Fissure) தோற்றுவிக்கலாம். நாட்பட மறைவாக இருந்து வந்த உள் மூலத்திலிருந்து ஏற்பட்ட குருதிப் போக்கின் விளைவாகத் துணை நோயாக வெளுப்பு நோய் (Anaemia) ஏற்படக்கூடும். நோய் நாடலின்போது கவனக் குறைவாக முதல் நோய் அறியப்படாமல் விடப்படுவதுமுண்டு. முடிவாக, மூன்றும் நிலை எருவாய் முளையில் நாட்பட்ட உறுத்துதலின் விளைவாகப் புற்றுநோய் ஏற்படுவதற்கான வாய்ப்புமுண்டு

இந்நோயின் கொடுமையான நிலையில் நோயினன் அடையும் துயரைச் சித்த மருத்துவப் பேரறிஞன் தேரன் தனது சேகரப்பாவில் பின் வருமாறு குறிப்பிடுகின்றான் :—

"கொடியபொல் லாதமூல குணத்தை
யென் சொல்வேன் பாந்தள்
இடியினில் ஒடுங்கு மாறே எவரையுங்
கசங்கச் செய்யும்
குடிகெடு மாறு செய்யும் கொண்டவர்
ஆயுட் கெய்தும்
முடிவதனாலே என்று மொழிந்தனர்
தழைந்த நூலோர்"

**பொழிப்புரை :**

கொடிய பொல்லாத எருவாய் முளையின் பண்பினை எவ்வாறு விரித்துச் சொல்வேன்? இந்நோயுற்றோன், இடியோசை கேட்ட நாகம் போலக் கலக்கமடைவான். அவனுடைய குடிகெடும் வண்ணம்வாழ்நாளையும் முடிக்குமென்று நுண்மாண் நுழைபுலம் மிக்க கற்றுத் துறை போகிய வித்தகர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

**நாடி :**

(1) அழல் வளி

"சிறப்பான பித்தத்தில் வாத நாடி
சேரில்..............மூலவாயு"

(2) வளி நாடி

"வாதமெனும் நாடியது தோன்றில் ......
மூலரோகம்" (சதகநாடி)

(3) மூவரும் மந்தமானல் முளைத்திடும்
மூலமெல்லாம் (குணவாகட நாடி)

**மருத்துவம் :**

"அனில பித்த தொந்தமலாது மூலம் வராது" என்றதற்கேற்ப வளி அழல் ஆகியவற்றைத் தன்னிலைப் படுத்தக் கூடியதாக அமைதல் வேண்டும். இந்நோய்க்கான மருத்துவம் (1) வருமுன் காத்தல் (Prophylactic) (2) ஆறுதல் மருத்துவம் (Palliative Trestment) (3)நோய் நீக்கம் (Curative Treatment) என்ற மூன்று நிலைகளில் அடங்கும்.

**வருமுன் காத்தல் :**

வளியினைப் பெருக்கக் கூடிய உணவுப் பொருட்களைக் குறிப்பாகக் கிழங்குகளை (கருணைக் கிழங்கு தவிர)

உட்கொள்ளாதிருத்தல். எளிதில் செரிக்கக் கூடியதும், காரம் குறைந்ததும் மலச்சிக்கலை ஏற்படுத்காததுமான உணவுப் பொருட்களை உண்ணுதல். மலச்சிக்கல் ஏற்படாத வகையில் கீரைகளையும், பழ வகைகளையும் உணவில் தக்க அளவில் கொள்ளுதல். எப்பொழுதும் ஒரேயிடத்தில் உட்கார்ந்திருத்தலைத் (Sedantary Habit) தவிர்த்து, அளவோடுண்டு முறையான உடற்பயிற்சிகளைச் செய்து உடல் பருமன் நேய்க்கு இலக்காகாதவாறு பேணிக்கொள்ளல்.

**ஆறுதல் மருத்துவம் :**

குருதி இழப்பைத் தடுக்கக் கூடிய பயன்படுத்தப்படும் மருந்துகள் :

தும், எருவாய் முளையைச் சுருங்கச் செய்து அரிப்பையும், எரிச்சலையும் தடுத்தலும், மலத்தை எளிதாகக் கழியுமாறு செய்தலும் இதனில் அடங்கும். இம்மருத்துவம் மிகுதியான குருதித் தேக்கத்தை (Congestion) ஏற்படுத்தாததும் முதல் நிலையில் அமைகிறதுமான எருவாய் முளைக்கே பொருந்தும். முதிர்ந்த இரண்டாம் நிலை எருவாய் முளைக்கும், மூன்றும் நிலை எருவாய் முளைக்கும் அறுவை மருத்துவமே முறையானது. அதுவும் அறுவை மருத்துவ விற்பன்னர் ஒருவராலேயே செய்யப்பட வேண்டும்.

1 நாக பற்பம் 130 மி. கிராம்
தேற்றான் இளகம் 10 கிராம் } நாளைக்கு இருவேளை

2 மலச்சிக்கல் இருக்கின்ற நிலையில் இரவில் மட்டும் 10-15 மி. லி. மூலகுடோரி நெய் உள்ளுக்குக் கொடுத்தல்

3 அரிப்பு (Pruritis) மட்டும் இருந்தால் அமிர்த வெண்ணெயையும், குருதிப் போக்குடன் எரிச்சல் இருந்தால் குங்கிலிய வெண்ணெயையும் வெளிப் பூச்சாகப் பயன் படுத்தலாம்

(இதுவே தற்போது சித்த மருத்துவ மனைகளில் மேற்கொள்ளப்பட்டு வருகின்ற முறையாகும்.)

இவை தவிர கீழ்க்கண்ட மருந்துகளையும், உற்றான் அளவையும் பிணியாளவையும் கருத்திற்கொண்டு தக்க முறையில் பயன் படுத்தலாம்.

**அகமருந்துகள் :**

**சூரணம் :**

கோப்பிரண்டைச் சூரணம், கருணைக் கிழங்குச்சூரணம் முதலியவை.

**நெய் :**

நாயுருவி நெய்

**இளகங்கள் :**

கருணை இளகம், ஆமை இளகம்; நத்தை இளகம் முதலியவை.

**மெழுகு :**

இரசகந்தி மெழுகு

**பற்பங்கள் :**

தங்க பற்பம், வெள்ளீய பற்பம், காரீய பற்பம், நத்தை பற்பம், முத்து பற்பம், முத்துச் சிப்பி பற்பம் முதலியவை

**செந்தூரங்கள் :**

நாகச் செந்தூரம், தங்கச் செந்தூரம், வெள்ளீயச் செந்தூரம், காரீயச் செந்தூரம் முதலியவை.

**புற மருந்துகள் :** புகை : குடசவித்துப் புகை

*ஆவி பிடித்தல் :* நொச்சியைக் கொதிக்க வைத்து பொறுக்கும் சூட்டில் ஆவியைப் படுமாறு செய்தல்

**எருவாய் முளையைப் போக்கும் பொருட்கள் :**

"மருள்சா ரடைகருணை வச்ரவல்லி காட்டுக்
கருணை புளிநரளை காருக் கருணை
மெருகோடு வெள்ளறுகு வெண்சித்ர மூலம்
வருமூலம் போக்கு மருந்து" (தேரன் பொருட் பண்பு நூல்)

சாரணை பிரண்டை குழம்பு மோர்கடுக்காய்
தான்றியும் நெல்லியின் காயும்
தாமரை வளையம் முள்ள நேர்வாளம்
சார்கொடு வேலியும் சிவதை
காரிடும் காட்டுக் கருணையும் வெல்லம்
கரிகருமையும் பழுபாகல்
கார்புளி கருணை புங்கு சேங் கொட்டை
கரியவேம்(பு) எள்ளுடன் மெருகும்
தேரிடு மஞ்சளும் சுக்குடன் மிளகும்
செய்ய திப்பிலி யவச்சாரம்
தீதறு கொட்டைக் கரந்தை கோமயமும்
தேன்மொழியே இனமது கேள்
வேரெதும் இரதம் வாங்கவுஞ் சார
வேகமே அது தனக்கீய
வெந்திடச் சாரச் சூட்டினுல் அறுக்க
மேவிய மூலநோய் உறரமே. (நோய்களுக்குச் சித்த பரிகாரம்)

**குருதி எருவாய் முளையை நீக்கும் பொருட்கள் :**

பூசிடவுந் திரிபுரத்தான் துத்தநாகம்
புகட்டு பேய்ப் பீர்க்கொட்டையையுஞ் சிறிதும்மட்டி
வீசுமயிலடி மரமுயிர்த்த மூலம்
வெட்பாலை பாவட்டை வெங்காரத்தான்
ஆசை மிகும் நீருள்ளி தாமரைப் பூ
சரக்கொன்றை மயிலிறகு மாவின் வெண்ணெய்
வாச வெருஞ் சிவிரியு நாயுருவி யீந்து
வல்லுதிர மூலத்து உறரங்களாமே
(நோய்களுக்குச் சித்த பரிகாரம்)

அருஞ்சொற் பொருள் :

திரிபுரத்தான் — குப்பை மேனி
மாவெண்ணெய் — பசுவின்வெண்ணெய்

துணை நூற்கள் :

1. குணபாடம் (டாக்டர். இரா. தியாகராசன்)
2 குணவாகட நாடி
3. சதக நாடி
4. சித்த மருத்துவம் (டாக்டர். க. ந. குப்புசாமி முதலியார்)
5. சித்தர் அறுவை மருத்துவம் (டாக்டர். க. சு. உத்தமராயன்)
6. தேரன் சேகரப்பா
7. தேரன் பொருட் பண்பு நூல்
8. நோய்களுக்குச் சித்த பரிகாரம் (டாக்டர் எம். சண்முகவேலு)
9. பொருட் பண்பு நூல் (டாக்டர். எஸ். கோவிந்தசாமி முதலியார்)
10. யூகி சிந்தாமணி

---

# பறந்த  கிளிகள்!

A. ராமலிங்கம்

இரண்டாம் ஆண்டு

"ராம்ஜி! நீ உனக்குத் தெரிந்த ரகசியத்தை என்னிடம் கூறுவிட்டால் அது எனக்குத் தெரியாமலேயே போய் விடும் என்று நினைக்காதே! நீ உனக்குத் தெரிந்ததை என்னிடம் மறைக்கிருய் என்பது உன் முகத்தைப் பார்த்தாலே தெரிகிறது. கடைசி முறையாகக் கேட்கிறேன் இப்போதாவது உண்மையைச் சொல்லிவிடு ... ... ...... நீ வரைந்த படத்திலுள்ள பெண் யார்?............அவள் பெயர் என்ன? ஊர் என்ன? அவளுக்கும் உனக்கும் என்ன உறவு? இதை மட்டும் நீ சொல்லி விட்டாயானுல் உன் ஆயுளுக்கும் நீ எந்த வேலையையும் செய்யாமல் சுக போகங்களோடு வாழலாம்!..........அந்த அளவுக்கு உனக்குத் தேவையான பொன்னையும் பொருளையும் வாரி வாரி வழங்குகிறேன். சொல் ... ... யார் அவள்?"-என்று ஆவலோடு முகத்தில் கோபம் கொப்பளிக்க கேட்டான் முகம்மது ஷா.

ராம்ஜி சுல்தானின் முகத்தை நோக்கினுன். அங்கு தாண்டவமாடிய கோபத்தைக் கண்டு அவன் அசந்து விடவில்லை. அவன் சொன்னதையே திரும்பத் திரும்பச் சொல்பவன் போல் "சுல்தான்!......நான் கற்பனையாக படத்தை வரையும் ஓவியன். என் கற்பனையில் உருவான பெண் அவள். அப்படியிருக்க நான் எப்படி அவள் பெயரையும் ஊரையும் சொல்ல முடியும்?......" என்ருன்.

சுல்தானின் புருவங்கள் கோபத்திஞல் துடித்தன ஆக்ரோஷமாக தன் பக்கத்தில் இருந்த படைத் தலைவனைப் பார்த்து,'இவன் வாயால் உண்மையைக் கக்கும் வரை கசையடி கொடுங்கள்!...... சித்திரவதை செய்யுங்கள்" என்று கூறி விட்டு வேகமாகச் சென்று விட்டான். ராம்ஜியின் உடலைச் சுல்தானின் சிப்பாய்கள் செங்குருதிக் காடாக்கத் துணிந்தனர்.

ராம்ஜி சிறந்த ஓவியன். அவன் தந்தை, மூதாதையர்கள் எல்லாம் ராஜ புதனத்தில் படைப் பிரிவில் பணிபுரிந்திருந்தாலும் அவர்களும் ஓவியக் கலையில் சிறந்து விளங்கியவர்களே. இளமையிலேயே பெற்ருேரை இழந்து விட்ட ராம்ஜியை அவனது மாமாதான் எடுத்து வளர்த்தார். ராம்ஜியின் மாமாவுக்கு நந்தினி என்ருெரு மகள் இருந்தாள். இளம் பிராயத்திலிருந்தே ராம்ஜியும் நந்தினியும் மிகவும் உயிருக்குயிராய் பழகியவர்கள் ஏழ்மையில் பிறந்து வறுமையில் உழன்றபோதிலும் நந்தினி ஒப்பற்ற அழகியாகவும், நல்ல புத்திசாலியாகவும், ராம்ஜியின் மீது மாருத அன்பு கொண்டவளாகவும் விளங்கினுள்.

இளம் வயதில் ராம்ஜி, நந்தினி இருவர் மனதிலும் அரும்பிய அன்பு அவர்கள் பெரியவர்கள் ஆக ஆக வளர்ந்து உருப்பெற்று காதலாக பரிணமித்தது.

இருவரும், பழகுவதையும் ஒருவரை விட்டு ஒருவர் பிரியாமல் இருப்பதையும், ஒருவருக்கொருவர் உயிராயிருப்பதையும் கண்ட ராம்ஜியின் மாமா நந்தினியை ராம்ஜிக்கே திருமணம் செய்து கொடுத்து நிம்மதியாகக் காலந் தள்ள எண்ணினார். ராம்ஜி தன் மாமா வீட்டிற்கு வந்த சில வருடங்களிலெல்லாம் அவன் அத்தை காலமாகி விட்டாள்.

அக்காலத்தில் பாரதத்தின் சில பகுதிகள் நீங்கலாக பெரும்பான்மையான பகுதிகள் முஸ்லிம் மன்னர்களின் அரசாட்சியின் கீழ் இருந்தன. முஸ்லிம் மன்னர்களின் ஆட்சிக்குட்படாத பகுதிகளில் முன்னணியில் நின்றது ராஜபுதனம். ராஜபுதனத்து வீரர்கள் ஒற்றுமைக்கும், கட்டுப்பாட்டிற்கும், வீரத்திற்கும் பெயர்பெற்றவர்கள். தோல்வியையே சந்தித்தறியாதவர்கள். ராஜபுதனத்துப் பெண்டிர்களும் கற்புநெறி வழுவாதவர்கள். தங்கள் கற்புக்கு ஆபத்து என்று எண்ணும் காலத்தில் தீக்குளித்து தங்கள் கற்பைக் காத்துக் கொள்ளவும் தயங்க மாட்டார்கள்.

ராம்ஜி சித்திரக் கலையில் நன்கு தேர்ச்சி பெற்றதும், எல்லா சுல்தான்களிடமும் சென்று பல வியத்தகு ஓவியங்களை வரைந்து கொடுத்து அவர்களிடமிருந்து நிறையச் சன்மானம் பெற்று திரும்பிவந்து நந்தினியை மணந்து கொண்டு சுகமாக வாழலாம் என்று எண்ணி தன் கருத்தினை மாமாவிடமும், நந்தினியிடமும் வெளியிட்டான்

நந்தினி ராம்ஜியைப் பிரிய வேண்டுமே என்று நினைத்தாலும்—அவன் எண்ணற்ற பொருட்செல்வத்துடனும், புகழுடனும் திரும்பி வந்து தன்னை மணந்து கொண்டு காலம் முழுவதும் இன்ப வாழ்க்கை நடத்துவான் என்று எண்ணி தன்னைத்தானே சமாதானம் செய்து கொண்டு அவனுக்கு பிரியாவிடை கொடுத்தனுப்பினாள்.

ராம்ஜி எல்லா சுல்தான்களையும் பார்த்தாகி விட்டது. இதுவரை அவன் பெற்றுள்ள செல்வங்கள் இரண்டு தலைமுறைக்குப் போதுமானதாக இருந்தது. இன்னும் அவன் டில்லி சுல்தான் முகம்மது ஷாவைப் பார்க்கவில்லை. அவன், நந்தினியையும் வீட்டையும் விட்டுப்பிரிந்து வந்து ஒரு வருடத்திற்கு மேலாகிறது எனினும் டில்லி சுல்தான் சிறந்த கலா ரசிகன் எனக் கேள்விப் பட்டு அவனிடம் சென்றான்.

ராம்ஜி இதுவரைச் சந்தித்த சுல்தான்களைவிட டில்லி சுல்தான் எல்லா வகையிலும், கலையை ரசிப்பதிலும் உயர்ந்தவன் என்று அறிந்தான். உடனே தகுந்த அனுமதி பெற்று டில்லி சுல்தானைப் பேட்டி கண்டான். போகும்போது தன் முழுத் திறனையும் காட்டி ஒரு ஓவியத்தை வரைந்து கையோடு கொண்டு செல்ல எண்ணினான். சட்டென அவன் முன் நின்றது நந்தினியின் எழிலுருவம். உடனே வண்ணக் கலவைகள், தூரிகைகள் கொண்டு நந்தினியின் எழிலுருவத்தை வரைந்து உடன் கொண்டு சென்றான். அதை டில்லி சுல்தான் முகம்மது ஷாவிடம் சமர்ப்பித்தான்.

அந்த ஓவியத்தைக் கண்ணுற்ற டில்லி சுல்தான் பெருமகிழ்வு கொண்டு அடுத்த சில தினங்களில் தன்னை வந்து காணும்படி சொல்லி ராம்ஜிக்கு விடை கொடுத்தனுப்பினான்.

சுல்தானிடமிருந்து நீங்கிய ராம்ஜி நேரே தான் தங்கியிருக்குமிடத்திற்கு வந்து சேர்ந்தான். படத்தைப் பார்த்ததும் தன் ஓவியத் திறமைக்கு மெச்சி தனக்கு நிறைய பொன்னும், மணியும், ரத்தினங்களுமாக வழங்கப் போகிறார் சுல்தான் என்று எண்ணி அன்று இரவு ஆனந்தமாக உறங்கினான் ராம்ஜி.

மறுநாள் காலை அரண்மனைச் சிப்பாய் ஒருவன் ராம்ஜியிடம் வந்து சுல்தான் அழைப்பதாகக் கூறவே தனக்கு இன்று நிறைய வெகுமதி கிடைக்குமென்ற உற்சாகத்தோடு தன்னை நன்றாக அலங்கரித்துக்கொண்டு சுல்தானைக் காணச் சென்றான்.

அங்கு சென்றவுடன் ராம்ஜி விஷயமறிந்து திடுக்கிட்டான். அதாவது ராம்ஜி அளித்த ஓவியத்தை சுல்தான் கலைக்கண்ணோட்டத்தோடு பார்க்கவில்லை. காமக் கண்ணோட்டத்தோடு பார்த்திருக்கிறான் என்பதை அறிந்து அவன் தலை சுழன்றது. அவன் மனதில் பயங்கரமான எண்ணங்கள் விசுவரூபம் எடுத்து அவனைக் கதிகலங்கச் செய்தன.

தான் உயிருக்குயிராகக் காதலிக்கும் நந்தினிக்கு தன்னால் எவ்வித ஆபத்தும் வரக்கூடாது, அவளைப் பற்றின எந்தவிவரங்களையும் சுல்தானிடம் சொல்வதில்லை என்று உறுதிபூண்டான் ஆகவேதான் சுல்தான் ஓவியத்திலுள்ள பெண்ணைப் பற்றி எவ்வளவோ நயமாகவும், உறுதியாகவும், பயமுறுத்தியும் கேட்டபோது, "அவள்................ என் கற்பனையில் உருவானவள்" என்றே சாதித்தான். பலன்?............தூரிகை பிடித்த கைகளில் இரும்பு விலங்கு மாட்டப்பட்டு பாதாளச் சிறையில் அடைக்கப்பட்டான் ராம்ஜி.

இருளரக்கன் எங்கும் தன் ஆட்சியைச் செலுத்திக் கொண்டிருந்தான்! பாதாளச் சிறையில் அடைக்கப்பட்டிருந்த ராம்ஜிக்கு தூக்கமே வரவில்லை. இந்தச்சிறையில் அடைபட்டு இன்றோடு ஏழு நாட்களாகின்றன. வீட்டை விட்டு வந்தோ ஒரு வருடத்திற்கு மேலாகிறது. அவன் மனமோ பலவித எண்ணங்களில் உழன்று தவித்தது. அவன் உணவைக் கண்டு பல நாட்களாகின்றன. சுல்தானிடம் கசையடி பட்டதனால் உடலெங்கும் ரணமாகிப் புண் ஏற்பட்டு சீழ் வடிந்துகொண்டிருந்தது.

"வீட்டை விட்டு வந்து ஒரு வருடத்திற்கு மேலாகிறதே, நந்தினி நமக்காக எத்தனை நாட்கள்தான் காத்துக் கொண்டிருப்பாள்? சுல்தான் என்னை மெச்சவேண்டும் என்று எண்ணி அவள் உருவத்தை வரைந்து கொண்டு போய் கொடுக்க அது இப்படி விபரீதமாக முடிந்துவிட்டதே .. .. பொழுது விடிந்தால் மீண்டும் சுல்தான் வந்து சித்திரவதை செய்வானே ... ......என்ன நேர்ந்தாலும் சரி ...... ... என் உயிரே போனாலும் சரி ...........இந்தக் காம வெறியனின் கரங்களில் என் நந்தினியைச் சிக்கவிடமாட்டேன்".

அப்போது யாரோ சிறைச்சாலையின் கதவைத் திறந்து கொண்டு வரவே, ராம்ஜியின் சிந்தனை கலைந்தது! ஏறிட்டு நோக்கிய ராம்ஜி ஒன்றும் புரியாமல் விழித்தான். அவன் உடல் பயத்தினால் நடுநடுங்கியது இந்த அகால வேளையில் ... ... யார் ஏன்?... எதற்காக இங்கு வருகிறார்கள் என்று அவனால் ஊகிக்க இயலவில்லை.

தலை முதல் கால் வரை கறுப்பு அங்கி போர்த்திய உருவம் மெல்ல அவனருகே வந்து தன் முக்காட்டைக் களைந்து 'ராம்ஜி' என அழைத்தது.

ராம்ஜிக்கு அதிர்ச்சியினாலும், ஆச்சரியத்தினாலும், ஆனந்தத்தினாலும் பேச்சே வரவில்லை.

யார்? நந்தினியா, ஆம்! சந்தேகமே இல்லை வந்திருப்பவள் நந்தினிதான்... "நந்தினி" என அவளைக் கட்டிப் பிடித்து கதறினான்.

"நந்தினி.........நீ எப்படி இங்கு வந்தாய்? என்னால் நினைத்துக்கூடப் பார்க்க முடியவில்லையே !.................. சுல்தானின் கழுகுக் கண்களுக்குத் தப்பி எப்படி இந்த சிறைச்சாலைக்குள் நுழைந்தாய்?"

"அத்தான் இங்கு டில்லி சுல்தான் அரண்மனையில் நம் உறவினர் ஒருவர் குதிரைப் படைத் தளபதியாக இருக்கிறாரே!...அவர்தான் எனக்கு நீங்கள் சிறைப்பட்டிருக்கும் செய்தியைச் சொல்லியனுப்பினார். உடனே குதிரையில் புறப்பட்டேன். இங்கு வந்து சேர மூன்று நாட்களாகி விட்டது. உடனே புறப்படுங்கள். நாம் தப்பிச் செல்வதற்கான எல்லா ஏற்பாடுகளையும் செய்து விட்டுத்தான் வந்திருக்கிறேன்.......... சிறைக் கதவு திறந்தேயிருக்கிறது எப்படியும் தப்பி விடலாம் ... ம் ..."

ராம்ஜிக்குத் தான்காண்பது கனவா? இல்லை நனவா? என்று சந்தேகமே ஏற்பட்டது. "ராஜபுதனம் எங்கே? டில்லி எங்கே? .... ராஜபுதனத்தில் இருந்து டில்லிக்கு மூன்றே நாளில் குதிரையில் ஒரு பெண் வந்து சேர முடியுமா? ...... நம்ப முடியவில்லை ......... கஷ்ட காலத்திலும் இது ஒரு நல்ல காலம் போலும் ...... ஆனது ஆகட்டும்" என்று நந்தினியின் கையைப் பிடித்தபடி வெளியே நடந்தான்.

பொழுது புலர்ந்தது...... ஆதவன் தன் செங்கிரணங்களை இந்தப் பூவுலகின் மீது பரப்பத் தொடங்கினான்.

டில்லி சுல்தான், அரண்மனையில் ஆக்ரோஷத்துடன் இரைந்து கொண்டிருந்தான்...அவன் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தது. அவன் எதிரே ராம்ஜி தப்பிவிட்ட செய்தியைக் கூறி பயத்தோடு கைகட்டி, வாய்பொத்தி நின்று கொண்டிருந்தனர் காவலாட்கள்.

"......... பாதாளச் சிறையிலிருந்து என் உத்திரவு இல்லாமல் காற்றுகூட வெளியே போக முடியாது ....... அங்கிருந்து அவன் எப்படித் தப்பிச் சென்றிருக்க முடியும்?...இதன் இடையில் ஏதோ சூழ்ச்சி நடந்திருக்கிறது ... உங்களையறியாமல் அவன் தப்பிச் செல்ல வழியில்லை. உங்களைப் பிறகு கவனித்துத் தக்க தண்டனை வழங்குகிறேன். முதலில் நாலாபுறமும் போய்த் தேடி அவனை இழுத்து வாருங்கள். நமது குதிரைப் படைகள் காற்றிலும் கடிதாகப் பறக்கட்டும் ...... எப்படியும் அவனை இழுத்து வரவேண்டும்".

சுல்தானின் கட்டளையை சிரமேற்கொண்ட சிப்பாய்கள் 'தப்பித்தோம்... பிழைத்தோம்'.........என்று நாற்றிசையும் ஓடினர்.

∴ ∴ ∴

கோபத்தினால் சிவந்தகண்களுடன் உட்கார்ந்திருந்த முகம்மது ஷாவின் சிந்தனையை 'சுல்தான்'! என்ற குரல் கலைத்தது.

எதிரே காவலர்கள்!

"என்ன சிக்கினுனு அந்த ஓவியன்?" ............கோப வெறியுடன் கூவினுன் சுல்தான்.

"கிடைத்தான்;...... அவனேடு அவன் காதலியும் கிடைத்தாள்"! ஆனுல்,

"ஆ ............ அவன் காதலியுமா கிடைத்திருக்கிருள்?...எங்கே அவள்?"

"சுல்தான் ...... மேரே ஹுசூர் ... எங்கள் கைகளில் அவர்கள் பிடிபடுமுன் அவர்கள் உயிரை காலன் கொண்டு சென்று விட்டான். அவர்கள் இறப்பதற்கு முன் எழுதி வைத்த கடிதம் இதோ!"

நடுங்கும் கரங்களுடன் சுல்தான் அந்தக் கடிதத்தைப் படித்தான். அதில்,

"பரிசு கேட்க வந்தவனிடம் பாவை கேட்டாய்! கலையரசன் என்று ஓடோடி வந்தேன்.......காமப்பித்தனுக வரவேற்ருய்! ராஜபுத்திர வீரர்களும் பெண்டிர்களும் வீரத்திற்கும் கற்பிற்கும் பெயர் பெற்றவர்கள் என்பதை நீ உணராதது விந்தையே! காமம் உன் கண்களை மறைத்து விட்டது! உன் கொடுமையின் காரணமாய் அவனியில் சேர்ந்து வாழ முடியாத நாங்கள் மரணத்தின் மூலமாக ஒன்று சேர்கிருேம்." - ராம்ஜி.

ஆம்! இவ்வுலகில் கிட்டாத அன்பைத் தேடி, அவ்வுலகை நாடிப் பறந்தன கிளிகள்!

"யா அல்லா! அநியாயமாக இரு உள்ளங்களைப் பிணைத்திருந்த அன்புச் சங்கிலியை அறுத்தெறிந்துவிட்டேனே ...என்னை இரக்கமற்றவனுக்கி விட்டாயே! ...... அல்லாவே, என்னை மன்னியும்!"

பாவமன்னிப்பைக் கோரும் சுல்தானின் கண்கள் நீரைப் பெருக்கி, கையிலிருந்த கடிதத்தை நனைத்தது!

---

"நாடக மேடையில் இன்பம் தரக்கூடிய காதல், வாழ்க்கையில் புயலாக வந்து விடுகிறது. எந்த அறிவாளிகளையும் அறிவிலிகளாக்கி விடுகிறது. காதலின் கொடிய தன்மை அவ்வளவு ஆழமாக மனிதத் தன்மையைத் தாக்குகிறது. மனிதனின் உயிரையே போக்கிவிடுகின்றது."

— பேக்கன்

★

"காதல் அறிவைவிட உயர்வானது, செல்வங்களைவிட அபூர்வமானது; நெருப்பில் அழிக்க முடியாதது; நீரால் தணிக்க முடியாதது. அது ஒருவகைத் தாகம்"

— ஆஸ்கர் ஒயில்டு

★

"ஒரே இடத்தில் மனதை ஈடுபடச் செய்வதற்கு இந்த உலகில் ஒரு பெண்ணைவிடச் சௌகரியமான இடம் வேறு இடம் எதுவுமே இல்லை."

— தாகூர்

# எத்தனை எத்தனை நினைவு!

இரா. இலட்சுமி,
இரண்டாம் ஆண்டு

1. உலகில் எத்தனை தெய்வம் - அவை
உண்மையோ பொய்யோ மனிதா?
அலகில் சோதியன் சிவனே - கூத்தன்
அவனிக்கு அவன்தான் இறையோ?

2. மனிதர் எத்தனை பேரோ - அவர்
மனத்தினில் நேர்மை உண்டோ?
இனிக்கும் வார்த்தை சொல்வார் - யாவும்
எதுவரை மெய்யோ அறியோம்!

3. உண்மைக்கு உயிருண்டோ உலகில் - நாளும்
உரமற்ற வார்த்தைகள் வீணே!
பெண்மைக்கு மதிப்பில்லை வாழ்வில் - பெருமை
பேசியது போனதுவே மண்ணாய்!

4. எத்தனை எத்தனை நினைவு - அவை
எல்லாம் வாழ்வில் மாயை
உத்தம நினைவில் வாழ்வாய் - மனிதா
உள்ளத்தால் உயர்ந்து நிற்பாய்!



என்றைக்கும் முதல்வர் - விழா
அன்றைக்குத் தலைவர் !




தூய யோவான் கல்லூரிப் பேராசிரியர்
அ. நரசிம்மன் பேசுகிறார் !

## மலர் வெளியீட்டுக்குழு அளித்த

# முத்தமிழ் விழா !

21—3—1974




முதற் பரிசுக்குரிய பேச்சை
வழங்குகிறார் தமிழ்ச்செல்வி !



மனதாரச் சிரித்து மகிழும்
கலா ரசிகர்கள் !




கலையெனும் நிலவதின் கதிரதில் விளங்கிடும்
கனிநிகர் மாணவி மாணவர் அணியே!

# அன்னை

செல்வி : தாஹிரா பீவி
பயிற்சி மருத்துவர்.

தாலாட்டிச் சீராட்டி வளர்க்கும் அன்னை
தரமாகத் தமிழ்பாடித் துதிக்கும் அன்னை
வாலாட்டம் போடுகின்ற குழந்தைக் கண்ணை
வாயாரப் புகழ்பாடி வாழ்த்தும் அன்னை

கோலாட்டிப் பயங்காட்டிக் குறும்ப கற்றும்
குன்றாத பரிவிற்கும் பெயரே அன்னை
பாலூட்டிப் பண்புடனே வளர்த்து நல்ல
பண்பாளன் ஆகவே மாற்றும் அன்னை!

பாசமென்ற சொல்லுக்கே விளக்க மானாள்
பண்பென்ற வித்திற்கே உருவ மானாள்
மாசுவென்று தானெதையும் கொண்டி ராமல்
மகத்தான தியாகத்தின் ஒளியு மானாள்!

பேசுதமிழ் மொழியதனைப் பயிற்று வித்து
பாரினிலே தமிழ்மகனாய் நிலைக்கச் செய்த
நேசமிகு அன்னையவள் தாழ்ப ணிந்தே
நேயமிகு தமிழ்மொழியால் பாவி சைப்போம்!



# குழந்தைகளை நல்வழிப்படுத்தும் முறை

இரா. சௌந்தரராஜன், இறுதியாண்டு, B. I. M.

நமது நாட்டின் தற்போதைய குழந்தைகளே பிற்காலத்தில் நாட்டின் மன்னர்களாகத் திகழ்வார்கள். இப்போது நாட்டில் சிறுவர்களாய் இருப்பவர்கள்தான் பிற்காலத்தில் நாட்டை நன்முறையில் நடத்தும் தலைவர்களாகவும், மக்களைக் காப்பாற்றும் மருத்துவர்களாகவும், தொழில் வளம் பெருக்கும் பொறியியலாளர்களாகவும் விஞ்ஞானிகளாகவும் மாறுவார்கள் "விளையும் பயிர் முளையிலே தெரியும்" என்பதற்கேற்ப சிறுவர்கள் சிறு பருவம் முதல் எவ்வித நோக்குடன் வளர்கிருர்கள் என்பதை அறிந்து அவர்களின் எண்ணங்களையும் செயல்களையும் நல்வழிப்படுத்துதல் வேண்டும். அதற்கான சிறந்த சிலமுறைகளைக் கற்பித்தல் வேண்டும்

## குழந்தைகளிடம் பேசும் முறை :

குழந்தைகளிடம் பேசும்போது மிகக் கவனமாகப் பேசவேண்டும். ஏனெனில் நாம் கடுமையான வார்த்தைகளைக் குழந்தைகளிடம் உபயோகிக்கும்போது அவர்களின் மதிப்பு. கண்ணியம், சுய நம்பிக்கை இவைகளுக்குப் பங்கம் ஏற்படலாம். சில சமயங்களில் இவ்வித மான வார்த்தைகள் சித்தக் கோளாறையும் உண்டுபண்ணும். குற்றம் கண்டு பிடித்தல், குறை கூறுதல், ஒரு குற்றத்திற்கு அக்குழந்தையே காரணம் என குற்றம் சாட்டுதல், பயம் காட்டுதல், அவமானப்படுத்துதல், வற்புறுத்திக் கூறுதல். பரிகாசம் செய்தல் கூடாது நாம் அவர்களையோ அவர்கள் செய்கைகளையோ விமர்சனம் செய்யும்போது நேரடியாகக் கண்டிக்கும் முறைகளைத் தவிர்க்க வேண்டும். உதாரணமாக ஒரு குழந்தையிடம் "எத்தனை முறை நான் உன்னிடம் சொல்லியிருக்கிறேன்." "எப்பொழுதுதான் நீ இதைப் படிக்கப் போகிருயோ?" "நான் சொல்வதைக் கேட்கப் போகிருயா? இல்லையா?" "ஒரு தடவை உனக்குச் சொன்ஞல் தெரியாதா?" என்பது போன்ற வாசகங்களைப் பயன்படுத்தக் கூடாது. இதற்கு மாருக அன்பான வார்த்தைகளைப் பேசுதல் வேண்டும்.

## குழந்தைகளைத் திருத்தும் முறை :

குற்றம் செய்வது குழந்தைகளின் இயல்பு. அவ்வாறு குற்றம் செய்து விட்டால் குழந்தைகளின் குணநலன்களைப் பற்றி ஆராயாமல், எந்த சூழ்நிலையில் குற்றம் செய்ததுஎன்பதை ஆராய வேண்டும். உதாரணமாக ஒரு 10 வயது சிறுவன் கண்ணுடி ஜன்னலை உடைத்துவிட்டால் "உனக்கு என்னடா வந்தது? கண்ணுடி சன்னல் அருகே போகதே என்று எத்தனை முறைதான் கூறுவது" என்று தாயோ. அல்லது "அவனுல் சும்மாவே இருக்க முடியாது அது அவன் பிறந்த ராசி" என்று

தந்தையோ கடிந்து கொண்டால் அது குழந்தையின் மனதைப் பாதிக்கும். இவ்வாறு விகாரமான சொற்களைப் பயன்படுத்தினால் குழந்தையின் செயலும் விகாரமானதாகத்தான் இருக்கும். இதற்கு மாறாக "கண்ணாடி உடைந்து விட்டது அந்த இடத்தைச் சுத்தம் செய்ய வேண்டும்" என்று கூறி தாய் அந்த இடத்தைச் சுத்தம் செய்தால், குழந்தை "நம் செயலால்தான் தாய் வேலை செய்யவேண்டியதாயிற்று" என்று தானாகவே சிந்திப்பான். அதன் பிறகு இது போன்ற செயல்களைச் செய்வதையும் தவிர்ப்பான்.

தவிர, கோபப்படும்படி குழந்தைகள் நடந்து கொண்டால் அது எவ்வளவு தான் பெற்றோரின் ஆத்திரத்தைத் தூண்டக்கூடியதாக இருப்பினும், குழந்தையின் மனதைப் புண்படுத்தக் கூடியனவும், கௌரவத்தைத் தாழ்த்தும் படியானதுமான வார்த்தைகளைப் பயன் படுத்தக்கூடாது. இதைத் தவிர்க்க "உன் செய்கையால் நான் வருந்துகிறேன்" என சாந்தமாகக்கூறி அவர்கள் மனதை மாற்றுதல் வேண்டும்.

ஒழுக்கம் :

ஒழுக்கம் உயிரினும் மேலானது எனவேதான் வள்ளுவரும்,

"ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்" எனக் கூறியுள்ளார். எனவே சிறு பருவம் முதலே குழந்தைகளை நல்லொழுக்கமுள்ளவர்களாக வளர்த்தல் வேண்டும். ஒழுக்கமாய் நடக்க வேண்டும் என குழந்தைகளை வற்புறுத்துதல் குற்றத்திற்கு ஏற்ற ஒரு தண்டனை இல்லை. அது அவர்களது பிற்கால வாழ்வை வளமுறச் செய்வதற்கு ஏற்றதாய் அமைந்த ஒரு ஊன்று கோலாகும்.

எனவேதான் நம் முன்னோர் ஒழுக்கத்தை உயிரினும் மேலாகக் கருதினர். ஆகையால் ஒழுக்கத்தை சிறு பருவம் முதலே கற்பித்தல் அவசியமாகும். குழந்தை ஒரு ஒழுக்கமற்றச் செயலை செய்யும் போது நாம் அதைக் கடினமாகத் தண்டிக்கலாம். ஆனால் நாம் கொடுத்த தண்டனையால் அக்குழந்தை தான் செய்த ஒழுக்கக்கேட்டை உணர்வதில்லை. ஒருவேளை தண்டனைக்குப் பயந்து அக்குற்றத்தை மறுபடியும் செய்யாதிருக்கலாம். இவ்வாறு தண்டிப்பதில் பயனில்லை.

இதற்கு மாறாக குழந்தையிடம் அவன் செய்த குற்றத்தை உணர்த்தி அதனால் ஏற்படும் தன்மை தீமைகளை எடுத்துக்கூறித் திருத்த முயல வேண்டும். உதாரணமாக ஒரு சிறுவன் பாடசாலைக்குச் செல்ல மறுத்தால் அவனை அடித்துப் பாடசாலைக்கு அனுப்பலாம். அவ்வாறு செய்தால் பெற்றோர் அடிப்பதற்குப் பயந்து ஒரு சில நாட்கள் செல்வான். சில நாட்கள் சென்றதும் அடிபடுவது அவனுக்குப் பெரிதாகத் தோன்றாது. வேறு வழிகளில் பாடசாலைக்குச் செல்லக் கூடாது என்ற வழக்கத்தை ஏற்படுத்திக் கொள்வான். அடிப்பதற்குப் பதில் அக்குழந்தையிடம் அன்பாகப் பல பெரியோர்களது சரித்திரங்களைப் புரியும்படி கூறி "அவர்களைப் போன்று பெரியவனாய் நீயும் மாற வேண்டுமானால் பாடசாலைக்கு ஒழுங்காகச் செல்ல வேண்டும். பிற்காலத்தில் நீயும் ஒரு பட்டதாரியாவாய்" என பிள்ளைகள் மனதில் ஒரு முற்போக்கு எண்ணத்தை உருவாக்கினால் குழந்தைக்குஒழுங்காகப் பாடசாலைக்குச் செல்ல வேண்டுமென்ற எண்ணம் உண்டாகிவிடும்.

**பொய் பேசுதலைத் தடுத்தல் :**

சிறு வயது முதலே குழந்தைகள் பொய் பேசுதலைத் தடுக்க வேண்டும். குழந்தைகள் ஏதேனும் தவறு செய்யும் போது பெற்றோர்கள் அதிகமாகக் கோபப்படுகிறார்கள். இதைக் கண்டு பயந்து தன்னைப் பாதுகாத்துக்கொள்ள தான் செய்த தவறை மறைக்கப் பொய் பேசுகிறது. தற்காப்புக்காகக் குழந்தைகள் பொய் பேசுதற்கு இடம் கொடுக்கக் கூடாது. உதாரணமாக ஒரு குழந்தை தேர்வில் வெற்றி பெறவில்லை என்று தெரிந்தால் "நீ தேர்ச்சி பெற்று விட்டாயா? அது உறுதி தானா?" என்பது போன்ற கேள்விகளைக் கேட்கக்கூடாது. இவ்வாறு கேட்டால் பெற்றோருக்கு அஞ்சி தேர்ச்சி பெறாத மாணவனும் தேர்ச்சி பெற்றுவிட்டேன் என்று கூறி விடுவான். இதற்கு மாறாக "உன் பள்ளியிலிருந்து தேர்ச்சி இதழ் வந்திருக்கிறது. நீ தேர்வில் வெற்றி பெறவில்லை என அறிவித்திருக்கிறார்கள். இது எங்களுக்கு அதிகக்கவலை யாக இருக்கிறது. இனிவரும் தேர்வில் அதிக மதிப்பெண்கள் வாங்கி எங்கள் கவலையை நீக்கிவிடு" என்று கூறினால் குழந்தை பொய் பேச வாய்ப்பின்றிப் போய்விடும். உண்மையைக் கேட்டு மகிழ்ச்சியடைவதைவிட பொய் பேசாமல் பார்த்துக் கொள்வதே பெற்றோரின் கடமையாகும்.

**பள்ளிக்கூட வீட்டுப்பாடம் :**
(Home work)

வீட்டுப்பாட வேலையானது குழந்தைகளுக்குக் கொடுக்கும் தண்டனையோ அல்லது பெற்றோருக்குக் கொடுக்கும் துன்பமோ அல்ல. பெற்றோர்க்கு அவர்களது வேலை எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியமானது பள்ளியில் படிக்கும் சிறுவர்களுக்குக் கொடுக்கும் வீட்டுப்பாட வேலை. இவ்வேலை ஒரு குழந்தை தன் சுய அறிவை உபயோகித்துச் செய்யக்கூடியதாகும். குழந்தை வீட்டுப்பாட வேலை செய்ய மிகவும் அவசியப்பட்டாலொழிய நேரடியாகப் பெற்றோர் உதவக் கூடாது. உதாரணமாக ஒரு செய்யுளுக்கு அல்லது கணிதத்திற்கு விடை காண முடியாவிட்டால் உடனே பெற்றோர்கள் அந்த செய்யுளுக்குப் பொருள் கூறுவதோ அல்லது கணிதத்தைக் கணித்துக் கொடுப்பதோ கூடாது. குழந்தையையே தன்னால் இயன்ற அளவுக்கு அகராதியின் உதவியால் கவிதைக்குப் பொருள் காண வழிகாட்ட வேண்டும். அவ்வாறே தன் புத்தகத்திலுள்ள மாதிரிக் கணக்குகளைப் பார்த்து விடை காணச் செய்ய வேண்டும். அதன்பின் அதில் தவறு காணின் பெற்றோர் அதைத் திருத்திக் கூறுதல் வேண்டும். இம்முறை குழந்தையின் அறிவையும் ஞாபக சக்தியையும் பெருக்கும். தன்னால் ஒரு காரியம் செய்ய முடியும் என்ற மனோதிடத்தையும் கொடுக்கும்.

மேற்கூறிய முறைகளில் குழந்தைகளை நல்வழியில் வளர்த்தால் பிற்காலத்தில் அவர்கள் சமுதாயத்தில் சிறந்த பிரஜைகளாகத் திகழ்வார்கள். இதனால் நாடும் சமுதாயமும் முன்னேறும்.

---

# கிரந்தி நோய் (மேக நோய் அல்லது பறங்கி நோய்)

செல்வி
ம. அகஸ்டினுள். B. A.
இறுதியாண்டு, B. I. M.
&
செல்வி
ச. இராணிந்நுரைச்சி,
இறுதியாண்டு, B. I. M.

## SYPHILIS

**இயல் : (Definition)**

இந்நோய் மேக நோய் என்று கூறப்படுவதினுல் ஆண் பெண் சேர்க்கையினுல் உண்டாகிறது என்றும் பறங்கி நோய் என்று கூறப்படுவதினுல் பறங்கியர்கள் இந்தியாவிற்கு வந்த காலத்து அவர்களால் தான் இந்நோய் இங்கு பரவியதாகவும் கூறப்படுகிறது. இருப்பினும் இந்நோய்பற்றி பன்னெடுங் காலத்துக்கு முன்னரே நமது சித்த மருத்துவர்கள் கூறி உள்ளனர்.

**நோய் வரும் வழி : (Aetiology)**

இந்நோய் கொண்ட ஆணுடனே அல்லது பெண்ணுடனே உடலுறவு கொள்ளுவதால் இந்நோய் உண்டாவதாக அறியப்படுகிறது. இது ஒரு தொத்து நோயாதலால் அந்நோயாளி உபயோகித்த பாத்திரம், நோயாளியின் துணிகள் முதலியவற்றை உபயோகிப்பதாலும் ஏற்படுகிறது. நோயாளியோடு நெருங்கிப் பழகுவதினுல் இந்நோய் ஏற்படுவது மிகக்குறைந்த விழுக்காடே (Percentage) உள்ளது மேலும் இந்நோய் உள்ள மங்கை கருத்தரித்தால் அவளுக்குப் பிறக்கும் குழந்தைக்கும் இந்நோய் பிறவியிலேயே உண்டாகலாம். இந்நோய்பற்றி "அகஸ்தியர் குணவாகட திரட்டில்" கீழ்க்கண்டவாறு கூறப்பட்டுள்ளது.

"மேகம் பிறந்த விதஞ் சொன்னரேந் நந்தி
ஆகரினந்தைப் பருவத்தில் போகிந்துப்
போகந்தினஞ் செய்யிற் புகழ் மந்தத்தே கூடில்
வாகுப் பரிவால் வழங்குஞ் சைபோகமே
சைபோகஞ் செய்யத் தவித்த கழியோடும்
ஐயாவமிர்த மடங்கிக் களவேலும்
மெய்யாக வித்து விழவிழப் புண்ணுகும்
மையான மேகம் வளருங் கிரந்தியே"

தற்போது இந்நோய் ஒருவிதமான நுண்கிருமியினுல் தோன்றுவதாகக் கண்டுபிடித்துள்ளனர். இக்கிருமியை நுண்பெருக்காடியைக் (Microscope) கொண்டு நோக்கின் அடைப்பான் சுற்று (Cork Screw) போன்ற வடிவமாக இருக்கும். இந்நுண்கிருமி Treponema Pallidum அல்லது Spirochaeta Pallida என்று அழைக்கப்படுகிறது.

**குறிகுணங்கள் :**

கிரந்தி நோயின் குறிகுணங்கள் 3 நிலைகளாகப் பிரிக்கப்படும்.

**ஆதி கிரந்தி : (முதல் நிலை) (Primary Stage)**

இந்நோய் ஒருவரைப் பீடித்த 10 நாட்கள் முதல் 10 வாரங்களுக்குள் முதல் நிலைக் குறிகுணங்களானது தோன்றும். இந்நிலைக் கிரந்திப் புண்ணனது முதலில் கடினமாக பயிறு அளவு உள்ள தடிப்பாக இருக்கும். இதன் மையப்பகுதி உட்குழிந்தும், ஓரங்கள் ஒழுங்கற்று உயர்ந்து, தடித்து, சிவந்து நோவற்றதாக இருக்கும். இதைச் சுரண்டினுல் குருதி வெளியாவதில்லை. அதிலிருந்து ஒருவித வபாநீர் (Serum) வடியும். அந்நீரில இந்நோய்க்கிருமிகள் அதிகமாகக் காணப்படும் எனவே அந்நீர் படும் இடமெல்லாம் இப் புண்கள் உண்டாகும்.

ஆண்குறி நுனித்தோலின் முனையில் இப்புண் ஏற்பட்டால் நுனித்தோலைப் பின்னே தள்ள முடியாது. நுனித்தோல் ஒட்டி காணப்படும் இதற்கு நுனித்தோல் ஒட்டல் (Phimusis). அல்லது மேல்தடைப் புண் என்று பெயர். நீர்துவாரத்தின்

(சலவாகி) (Urethra) உட்பாகத்தில் இருந்தால், உள்ளிருந்து நச்சுநீர் வடிவதாலும், தொடுவதற்கு கடினமாக இருப்பதாலும் மட்டுமே இந்நோயை அறிய முடியும்.

பெண்களுக்கு யோனிதுவாரத்தின் (Vaginal orifice) ஓரத்திலும் இதழ்களிலும் (Labia) இப்புண்கள் வரலாம். சிலவேளைகளில் கருப்பை வாயிலிலும் (Cervix) உண்டாகலாம். எனவே அவ்விடங்கள் மிகவும் கடினமாகி வீங்கிக் காணப்படும்.

மேலும் இந்நோயின் தொடக்க நிலையில் உள்ள புண்கள் உதடு, நகங்கள், தொண்டை முதலிய இடங்களிலும் உண்டாகும். விரல்களின் நுனியில் உண்டாகும் புண்கள் லேசாக வேதனை உள்ளதாக இருக்கும். இதனை நகச்சுற்று என்று சிலர் தவறுதலாக எண்ணுவதும உண்டு.

கிரந்தி நோயின் முதல் நிலையில் அப்புண்கள் தோன்றிய இடங்களின் பக்கங்களில் உள்ள சோஷணக் கிரந்திகள் (Lymph Glands) பெரிதாகும். இவை நோவு அற்றதாகவும், கடினமான உருண்டைகளாகவும் தென்படும். இவை எளிதில் தீருவதில்லை. பொதுவாக ஜனன உறுப்புக்களில் இப்புண்கள் ஏற்பட்டால் தொடையில் உள்ள சோடணக்கிரந்திகள் (Inguinal Glands) தாபிதமடையும் (Inflamation). இதனை அரையாப்பு (Bubo) என்பர். இது எளிதில் அமுங்கி விடுவதில்லை

நோயாளி முதலில் இப்புண்களை கிரந்திப் புண்களாக எண்ணுவதில்லை. சாதாரணமான புண் என எண்ணி இதற்கு எளிய மருத்துவம் செய்தாலும் மருத்துவமே செய்யாது விட்டுவிட்டாலும் இரண்டு மூன்று மாதங்கள் கழித்து தானகவே இப்புண்கள் குணமடைந்து விடும். புண் இருந்த இடத்தில் ஒரு சிறு தழும்பு மட்டும் காணப்படும். சில மாதங்கள் சென்றதும் அத்தழும்பு அதிகமாக கருமை நிறமடைந்து வெடித்து, சீழ்கோர்த்து, புண்ணாகி, அதன் பக்கத்தில் உள்ள தசைகளையும் கேடடையச் செய்யும்.

முதல் நிலையில் 15 நாட்களுக்குப் பின் கிரந்தி நோயாளியின் இரத்தத்தைச் சோதனை செய்தால் அதில் இந்நோய்க்கிருமிகளைக் காணலாம். எனவே இந்நோயின் முதல் நிலையிலேயே தக்க மருத்துவம் செய்யாவிடில் இரண்டாம் நிலை தோன்றும்.

**நடுக்காலக் கிரந்தி :** (இரண்டாம் நிலை) (Secondary Stage)

முதல் நிலையில் தோன்றிய படர்த் தடிப்புகள் மறைந்து சில நாட்கள் அல்லது வாரங்கள் கழிந்த பின் மீண்டும் இளம் சிவப்பு நிறப்படைகள் தோன்றும். எனவே இது இரண்டாம் நிலையின் துவக்கம் என அறியலாம். நாள் செல்லச் செல்ல இப்படைகள் தெளிவாகவும், சுரசுரப்பாகவும், காணுக்கடி (Urticaria) தடிப்புகள் போன்று உடல் முற்றும் காணப்படும். சிறு படைகள் நாளடைவில் பெரியதாகிவிடும்.

இவ்விதமான இளஞ்சிவப்பு நிறப் படர்த் தடிப்புகள் முதலில் சிறியதாக இருந்து நாட்கள் செல்லச் செல்ல பெரியதாகி தொடுவதற்கு கடினமாகவும் அழுத்தினால் மினுமினுப்புள்ளதாகவும் காணப்படும். இப்படர்த் தடிப்புக்களின் மத்திய பாகத்தில் உதிர்ந்து செல்லும் செதில்கள் காணப்படும். இந்நிலையில் படர்த் தடிப்புக்கள் தெளிவாகக் காணப்படும். இவைகளில் கொப்புளங்கள் தோன்றி, வெடித்து மேல்பாகச் செதில்கள் உதிரும். செதில்கள் உதிர்ந்ததும் வெளிப்பக்கத் தோல் விரைவில் வளர்ந்து மேற்பாகம் உடனே மூடிவிடுவதால் மேற்பாகம் கறுப்பு நிறமடைந்து புண் ஆறுவது போல் தோன்றும் இதில் எவ்வித நீரும் வடிவதில்லை ஆனால் உள்பாகத்தசைகள் கேடடையும்

புட்டப்பிளவு (Between the Buttocks) விதைப் பை (Scrotal Sac). இதழ்கள் (Labia), தொடை முதலிய இடங்களில் காணப்படும் படர்த்தடிப்புகள் மிகவும் தோற்றமுள்ளதாகவும் சாம்பல் நிறம்

கலந்த வெண்மை நிறமுடைய தாகவும் இருக்கும். இதனை Broad Condylomate என்று அழைப்பர். மேலும் தோல் எப்பொழுதும் ஈரமாய் உள்ள இடங்களான விரல் இடுக்கு, வெளி ஜனன உறுப்புகள் (External Genital Organs) தடைவாய் ஓரங்கள், மலவாய் (Anus) முதலிய இடங்களில் ஏற்படும் படர்த்தடிப்புகள் ஒன்றோடொன்று சேர்ந்து கொத்தாகக் காணப்படும். இவை சிவந்து பதனடைந்த வெண் ஆவரக விலங்களால் (Epithelium) மூடப்பட்டுக் காணப்படும். இப்புண்களிலிருந்து ஒருவிதத் திரவம் கசிந்து கொண்டிருக்கும். விரல்களின் நுனியில் ஏற்பட்டால் நகங்கள் கடினமாகி,சிவந்து,வீங்கி, விகாரமாய்த் தோன்றும்.

இரண்டாம் நிலையில் தலையில் ஏற்படும் படர்த் தடிப்புக்களால் தலைமயிர் உதிரும். இதனால் புழுவெட்டுப்போன்று தலையில் பல இடங்களில் வழுக்கை ஏற்படுவதுண்டு. மேலும் கண் புருவ மயிர்களும் தாடி மயிர்களும் உதிர்வதுமுண்டு.

கிரந்தி நோய்த் தடிப்புக்கள் உடலில் உண்டாவதற்கு முன்பே வாயின் மிருதுவான அண்ணமானது (Palate) விகாரமடைகிறது. உதட்டில் உட்புறச்சவ்வு, தொண்டைச் சவ்வு முதலிய இடங்களில் சாம்பல் நிறம் கலந்த வெண்ணிறத் தடிப்புகள் தோன்றுகின்றன. இவற்றின் ஓரங்கள் சிவந்து சிறுசிறு குருக்களுடன் காணப்படும். நாக்கில் காணப்படும் தடிப்புகள் இளஞ்சிவப்பு நிறத்துடன் சுரசுரப்பாய்க் காணப்படும். இதிலிருந்துவரும் நீரில் கிரந்திநோய்க் கிருமிகள் காணப்படும். மூக்கின் உட்பாகம் சுவாசப் பாதை, தொண்டை, கிருகம்(Pharynx),குரல்வளை Lharynx), ஆகிய இடங்களிலும் தாபிதம் உண்டாகும். இதனால் இந்நோயாளிக்கு குரல் கம்மல் ஏற்படுவதுண்டு.

எலும்புகளும், பொருத்துகளும் இரண்டாம் நிலையிலேயே சிறிது பாதிக்கப்படும். இந்நிலையில் மூட்டுகளில் வீக்கம் ஏற்படும். அதிக வலி இருப்பதில்லை. மூட்டுகளின் அசைவுகள் இதனால் குறைவு படும்

குருதி நாளங்களில் (Superficial Veins)குறிப்பாகக் கால்களில் முடிச்சுகள் காணப்படும். இது நோவற்றதாக இருக்கும்

கிரந்தி நோய் ஒருவனைப்பற்றினால் 3 முதல் 8 மாதங்களுக்குள் பார்வைக் குறைவும், தலை நோவும் ஏற்படும். கண் சிவந்து காணப்படும் கண்மணியின் (Pupil) ஓரத்தில் மிகச்சிறிய வெண்முடிச்சுகள் (Nodules) காணப்படும்.வருணித்தாபிதமும்(Iritis), சிறுங்கைத்தாபிதமும் (Corneitis) உண்டாகும். எனவே உடனடியாக இதற்கு மருத்துவம் செய்யாவிடில் கண் பார்வை இல்லாமலே போய்விடும்.

இவ்வாறு கிரந்தி நோயின் இரண்டாம் நிலை ஏற்படும் காலத்தில் சுரம், தலைவலி, கைகால்வலி, போன்ற குறிகுணங்கள் ஏற்படும். சில வேளைகளில் முதல் நிலை முடிவிலேயே இந்நோயாளிக்கு உடல் நலம் குறைந்து முறைச் சுரம் அல்லது விடாச்சுரம் உண்டாகும். அத்துடன் படர்த்தடிப்புகளும் ஏற்படும். இரத்தப் பரிசோதனை செய்தால் செவ்விலங்களின் (R. B. C.) எண்ணிக்கை குறைந்து காணும். குருதி வெண் விலங்கள் (W B. C) அதிகமாகக் காணப்படும்.

கடைக்கிரந்தி : (மூன்றும் நிலை)
(Tertiary Stage)

இரண்டாம் நிலையில் காணப்பட்டத் தடிப்புகள் மூன்றும் நிலையில் வெடித்து புண்ணாதும் இதனை கிரந்திப் புண் என்பர் இப்புண்கள் பெரியதாகக் காணப்படும் இவை வலியில்லாத ஒரு சதை வளர்ச்சிப் போல் காணப்படும். நடுப்பாகம்வெடித்து அதில் நுரையுடன் கூடிய சீழ் காணப்படும். அப்புண்கள் உள்ள இடத்தின் தசையானது அழுகிக் காணப்படும் இந்நிலையிலும் மூட்டுகள் அதிகமாக வீங்கித் தாபிதமடையும்.

எலும்புகளும் தாபிதமடையும் நீண்ட எலும்புகளில் தாபிதமேற்பட்டால் அதன் மத்தியப் பகுதியில் புண்கள் ஏற்பட்டு அவை புரையோடிவீங்கிக்காணும். புண் தோன்றிய இடத்தின் திசுக்களில் பதனிழந்து பள்ளம் ஏற்படும். துளைப்பதுபோன்ற வேதனையும் காணும். அப்புண்ணாலிருந்து வடியும் சீழில் பதனிழந்த திசுத் துண்டுகள் காணப்படும்.

எலும்புகள் பொதுவாகப் பிறவியிலேயே ஏற்படும் கிரந்தி நோயில்தான் அதிகமாகப் பாதிக்கப்படும். அதிகமாக செத்துரு என்பு (Clavicle Bone), நெஞ்சென்பு (Sternul Bone), பழுஎன்புகள் (Rib Bones). தொடைஎன்பு (Femoral Bone), நளக என்பு (Tibia Bone), கபால என்பு (Skull Bone) முதலியவைகள் பாதிக்கப்படுவதுண்டு. மேலும் மூக்கிலுள்ள என்பும் அண்ணுக்கு என்பும் (Palate) இதனல் பாதிக்கப்படும். மூக்கில் புண் உண்டாகி நீண்ட நாட்கள் ஆனதும் மூக்கு என்பு அறிக்கப்பட்டு அண்ணத்தோடு சேர்ந்து துளை விழுந்து விடும். கபாலத்தில் இப்புண்கள் ஏற்பட்டால் மூளை, கசேறுகொடி (Spinal Cord) இவை அதிகமாகப் பாதிக்கப்படும்.

நாக்கில் உண்டாகும் கிரந்திப்புண்கள் முடிச்சுகள் போல் காணப்படும். இவை குரல்வளை வரையிலும் ஏற்படுவதுண்டு. நாக்கில் இப்புண்கள் உள்ள பாகமானது தடித்து, கடினமாகி, நீளும் சக்தி இல்லாது, நீல நிறம் கலந்த வெண்மை நிறமாக இருக்கும். இப்புண் வெடித்து நாக்கைப் பல பிரிவுகளாகப் பிரிக்கும் எனவே நாக்கில் கிரந்திப் புண் ஏற்பட்டால் எவ்வித சூடான உணவையும் அந்நோயாளி அருந்த இயலாது

ஆண் குறியில் இக்கிரந்திப் புண்கள் ஏற்பட்டால் விதையானது வீங்கி, கனமாகி, உணர்ச்சி இழந்தும் காணப்படும். பீஜக் கொடியானது (Spermetic Cord) கடினமடையும். புரஸ்தகோள தாபிதத்தையும் (Prostatitis) ஏற்படுத்துவதுண்டு. இளைப்பு நோய் (Tuberculosis), கீல்வாயு(Rheumatoid Arthritis)போன்ற நோய்களில் ஏற்படும் சுரம் போல் சுரம் காணப்படும்.

**நோய்க் கணிப்பு:- (Diagnosis)**

கிரந்தி நோயினைக் கணிப்பதற்கு குருதியின் "வாசர்மன்" சோதனை (Wassermann Test) அல்லது "கான்" சோதனை (Kahn Test) மிகவும் உதவியாகும். குருதியைச் சோதிப்பதாலும், தடிப்புகள் காணப்பட்ட இடத்தின் பக்கத்தில் உள்ள சோஷணக் கிரந்தியின் (Lymph Gland)நீரை எடுத்துச்சோதிப்பதாலும் இந்நோய்க் கிருமிகள் இருப்பதைக் கண்டறியலாம். மேலும் முதல் நிலையில் கிரந்தி நோய்க்கான படர்த் தடிப்புகளின் நிறம், அவை ஏற்பட்ட காலம், அவற்றின் வடிவம், உணர்ச்சி இன்மை, மினுமினுப்பு, அதிலிருந்து வடியும் நீரின் தன்மை, பக்கங்களிலுள்ள சோஷணக்கிரந்திகளின் தாபிதம் இவைகளிலிருந்து நோயை ஒருவாறு கண்டறியலாம்

குறியில் (Genital Organ) ஏற்பட்டால் அரையாப்பு உண்டாகும் தவிர லசுனம் (Tonsil), வாய் இவைகளில் ஏற்பட்டால் உமிழ்நீர்க் கோளங்கள், கழுத்து பக்கங்களில் உள்ள சோஷணக் கிரந்திகள் தாபிதமடையும் இவ்விதம் தாபிதமடைந்த சோஷணக்கிரந்திகளில் நோவு ஏற்படுவதில்லை. எனவே நாம் கிரந்தி நோயைப் பிரித்தறியலாம்

விரல்களின் நுனியில் ஏற்படும் தடிப்புகளை நாம் நகச்சுற்று என்றும் எண்ணலாம். ஆனல் கிரந்திநோய்ப் படர்த்தடிப்புகளில் நோவு அதிகமாக இருப்பதில்லை. மேலும் இவை கபில நிறமாகவும் (Browny) நீண்ட நாட்களாகவும் காணப்படும்

இரண்டாம் நிலையில் காணப்படும் கிரந்தி நோய்த் தடிப்புகளை ஒவ்வாமையால் (Allergic) ஏற்பட்ட தடிப்பு என்றும், காணுக்கடித் தடிப்புகள் என்றும்

தவறுதலாக எண்ணக்கூடும். எனவே அத்தடிப்புகளின் சிவந்த நிறத்தாலும், செதில்கள் உதிரும் தன்மையாலும், மினுமினுப்பாலும், அவைகள் தோன்றிய காலத்தின் வேறுபாடுகளாலும், உணர்ச்சி இன்மையாலும் கிரந்திநோய் என அறியலாம்.

படர்த்தடிப்புகள் வெடித்து அவற்றிலிருந்து வரும் நீரின் தன்மையும், புண்ணின் உட்பாகமானது பதனிழந்து புரையோடிக் காணப்படுவதும் இக்கிரந்திப்புண்ணிற்கே உரிய தனிக்குணங்களாகும். வாயிலுள்ள புண்ணின் குறிகுணத்தாலும் கிரந்திப் புண்ணை தனியாகக் கண்டு அறியலாம்.

மூன்றும் நிலையில் நாம் கிரந்திப் புண்ணை கணிப்பது எளிதாகும். இந்நிலையில் படர்த் தடிப்புகள் பெரிதாகி கட்டியாக மாறி பின் கட்டி உடைந்து புண்ணாகும். புண்ணின் நடுப்பாகம் வெடித்து புரையோடிக் காணப்படும். ஓரங்கள் கடினமாகவும், ஒழுங்கற்றும் காணப்படும். ஆனல் புண்ணின் மத்திய பாகம் குணமாகிவரும் புண்போலத் தோற்றமளிக்கும். உட்பாகம் பதனழிந்து புரையோடிக் காணப்படும். மேலும் முதல் நிலை ஏற்பட்டு அதைத் தொடர்ந்து இரண்டாம் நிலை ஏற்பட்டு பின்னரே மூன்றும் நிலை ஏற்படுவதால் இதனைக் கிரந்திப் புண் என்று எளிதில் கண்டறியலாம்.

பரிகார முறை:- (Treatment)

இது எளிதில் பிறருக்குப் பரவும் நோயாக இருக்கின்றமையால், கிரந்திப் புண்ணிலிருந்து வடியும் நீர் பரவாமல் தடுக்கத் தக்க முறைகளைக் கையாள வேண்டும்.

பொதுவாக இந்நோய் மூன்று நிலைகளில் கூறப்படுகின்றமையால் ஒவ்வொரு நிலைக்கும் தக்கவாறு பரிகாரம் மாறுபடுகிறது.

முதல் நிலையில் கிரந்திப் புண் பிறப்பு உறுப்புக்களில் தோற்றமளிக்கக் கூடும் அச்சமயங்களில் அப்புண் குணமடையவும் குருதியில் கலந்துள்ள நோய் நுண்மங்கள் மற்ற இடங்களுக்குப் பரவாமல் தடுக்கவும் உபாயங்கள் மேற்கொள்ள வேண்டும். இவைகளில் புண்ணை ஆற்ற கிருமி நாசினி (Anthelmintic), அழுகலகற்றி (Antiseptic), துவர்ப்பி (Astringent), குளிர்ச்சியுண்டாக்கி (Refrigerant) முதலிய செய்கைகள் உள்ள மருந்துகளைக் கொண்டுச் செய்த வெளிப்பிரயோக மருந்தைக் கையாள வேண்டும். இத்தகைய வெளிப் பிரயோக மருந்துகளில் முக்கியமானவைகளாவன: (1) பூரப் பொடியைக் கொண்டு புண்ணுக்குத் தூவ புண் எளிதில் ஆறும். (2) மேக விரணக்களிம்பு

செய்முறை:-

இரசம் (Mercury)
இலிங்கம் (Mercuric Sulphide)
வீரம் (Hydrargyrum Perchloride)
பூரம் (Hydrargyrum Sub chloride)
பால் துத்தம் (Zinc Sulphate)
மிருதார் சிங்கி (Lead Sulphide)
நீரடி முத்து (Hydnacorpus wightianus)
கார்போகரிசி (Psoralia coryli folia)
கசகசா (Papaverae somni ferum)
இவை சம எடை
மஞ்சள் மெழுகு (Yellow wax)
தேங்காய் எண்ணெய்.

சரக்குகளை முறைப்படிச் சுத்தி செய்து கொள்ள வேண்டும். தேங்காய் பொடி செய்து எண்ணெயைக் காய்ச்சி மஞ்சள் மெழுகு கலந்து உருக்கி அத்துடன் பொடி செய்த சரக்குகளைக் கொட்டிக் கிளறி தக்க பதத்தில் எடுத்து வைத்துக் கொண்டு வெளிப் பிரயோகமாக கிரந்திக்குப் பயன் படுத்தலாம்

முதல் நிலையில் உள் மருந்தாகக் குருதியின் கேட்டை நீக்கவும், குருதியைத் தூய்மைப் படுத்தவும் கூடிய மருந்துகளைக் கொடுத்தல் வேண்டும் அவைகளில் சில (1) கந்தக ரசாயனம். (2) பரங்கிப்பட்டைப் பதங்கம். இவைகளை 5-10 grain வீதம் பாலில் கலந்து நாள் ஒன்றுக்கு மூன்று வேளை வீதம்

நோய் நீங்கும் வரை கொடுத்தல் வேண்டும்

இரண்டாம் நிலை :-

இந்நிலை நாள்பட்ட நிலையாக இருக்கின்ற தன்மையால் இந்நிலையில் உண்டான புண்களுக்கு முதலாம் நிலையில் கூறப்பட்ட வெளிப்பிரயோக மருந்துகளைக் கொடுப்பதோடு இச்சமயத்தில் உண்டான படைகளுக்கு கீழ்கண்ட மருந்தை வெளிப்பிரயோகமாக உபயோகித்தல் வேண்டும்.

அறுகன்சாறு (Cynodon dactylon) அரை படி

குப்பைமேனிச்சாறு (Acalypha indica) அரை படி

தேங்காய் எண்ணெய் அரை படி

இம்மூன்றையும் கலந்து அடுப்பேற்றி, அதில் நீரடிமுத்து (Hydrnacarpus wightianus) போட்டு எரித்துக்கொண்டு சூடேறியவுடன் அதில் கொப்பரைத் தேங்காய்(Cocos nucifera),கார்போகரிசி (Psoralia corylifolia), மிருதார்சிங்கி (Sulphide of Lead) இவைகளை நீர் விட்டு அரைத்துக் கற்கமாகக் கலந்து நீர்த்தன்மை இல்லாமல் காய்ச்சிஇறக்கி வைத்துக்கொண்டு உபயோகிக்க வேண்டும்.

உள்பிரயோகமாக ரசதைலம் ஒரு தேக்கரண்டி காலை, மாலை கொடுக்க நோய் நீங்கும்

மூன்ரும் நிலையில் :-

முதலாம் இரண்டாம் நிலைகளில் கூறப்பட்டுள்ள உள்மருந்துகளை மூன்ரும் நிலையிலும் கொடுக்கலாம். தவிர கீழ்கண்ட மூலப்பொருட்கள் சேர்ந்த மருந்துகளையும் கொடுக்கலாம்.

இரசம், கந்தகம், பூரம் இவைகளாலான மருந்துகளும், இச்சத்துள்ள மூலிகைகளால் செய்யப்பட்ட மருந்துகளும் இந்நோய்க்கு நல்ல பலனைக் கொடுக்கும். இதனைக் கீழ் கூறப்படும் பாடல்கள் வலியுறுத்தும்

''நீரடி முத்திற்கு நீங்காக் கிரந்தி குட்டம்
போம்'' (அகத்தியர் குணவாகடம்)

....மட்டலருங் கூந்தன் மயிலே கிரந்திக்
கூட்டம் போஞ் செங்கையில்
ஏந்து சேங்கொட்டை தனையே''
(அகத்தியர் குணவாகடம்)

''தாகம் பலவாதந்தாது நட்டம்
புண்பிளவை
மேகங்கடி கிரந்தி .. .. .. போம்
பறங்கிப் பட்டையினை உச்சரித்துப்பார்''
(தேரையர் குணவாகடம்)

''விழிநோய் கிரந்தி குன்மம் மெய்ச்சூலை
புண்குட்டம்
.. .. .. .. இரசத்தினல் போம்''

''சசிவன்ன கருப்பூரத்தால்
மருண்டேகுத்தும் அரையாப்புமன்டை
சூலை கபாலவிடி
பரங்கிச் சூலை பற்கிரந்தி பக்கச்சூலையிவை
முதல்போம்''

கந்தகம் 80 கிராம் எடுத்து 2 படி பசும் பாலில் துலா எந்திரமாக எரித்து எடுத்து பொடி செய்து, கத்தரிப் பிஞ்சு 20-ஐ எடுத்து ஒவ்வொன்றையும் 4 பிளவைகளாகக் கீறி 4 கிராம் தூளைத் திணிக்கவும், பின் தேங்காய் பாலில் காய்களை இட்டு வேகவைத்து எடுத்து வைத்துக்கொண்டு 1 காய் காலை, 10 நாட்கள் அருந்த நோய் நீங்கும்,
[வைத்தியராஜசிந்தாமணி II Part1895]

விடதாரி வேர்ப்பட்டை (Mimosa cinerea) 2 gm, ரசம் 6 gm. இரண்டையும் அம்மியில் நன்கு அரைத்து பீங்கான் பாத்திரத்தில் எடுத்து வைத்துக்கொண்டு 9 நாட்கள் காலை மாலை இரண்டுவேளை உட்கொள்ளவேண்டும்.
[வைத்தியராஜசிந்தாமணி Part I 1898]

பிரமதண்டு பூண்டு (Argemone mexicana), மிளகு (Piper nigrum) 2, பூண்டு பல் 7 (Allium sativum) இவற்றைச் சேர்த்து அரைத்து எலுமிச்சைக்காய் அளவு 3 உருண்டைகளாகச் செய்து ஒரு உருண்டையோடு நீராகாரம் சேர்த்து மூன்று முறை அருந்த வேண்டும். -[வைத்தியராஜசிந்தாமணி]

பத்தியம்:-

இச்சா பத்தியம், கரப்பான பதார்த்தம், உப்பு, புளி தவிர்க்கவும்.

---

# சர்வ நோய் சங்கார காடிக்கார இரச சுண்ணம்

## (கோஷாயி முறை)

Contributed by

Dr M. SHANMUGAVELU,
L. I. M., H. P. I. M.
(Perasiriar - Siddha - Retired)

உப்பு 6 பவுண்டு எடுத்து இளநீர் 2 பவுண்டு அதில் சிறிது சிறிதாக விட்டு அரைத்து உருண்டையாக உருட்டி அடி கனத்த மட்சட்டிக்குள் வைத்து ஷெ உப்பு உருண்டையில் நடுமையம் சிறிய பள்ளம் செய்து வைத்துக்கொண்டு, அது உலர்ந்தபின் குகை செய்யும் மருந்துகளாவன: சுத்தி செய்த கெந்தி, வீரம், பூரம், லிங்கம், தாளகம், வெள்ளை, கௌரி - இவ்வேழு சரக்குகளும் வகைக்கு விராகனிடை 5 வீதம் எருக்கம்பால் விட்டரைத்துக் குகையும் மூடியும் செய்து மூடியில் 5 துவாரங்களிட்டு உலர்த்தி வைத்துக்கொண்டு, ஒரு சிறிய குடுவையில் சித்திரப் பாலாடையை வேருடன் பிடுங்கி வந்து அம்மியிலிட்டு மைபோலரைத்து பாதி கவசம் வரை அரைத்த மருந்தை அமுக்கி வைத்து அதன்மேல் வெள்ளிக் காடிக்காரம் விராகனிடை 5 எடுத்துக் குடுவையிலுள்ள அரைத்த மருந்தில் சொருகி வைத்து அதன் மேலும் மறு பாதிக் குடுவைக்கு அரைத்த மருந்தை வைத்து அமுக்கிச் சில்மூடி ஏழுசீலை மண் வலுவாகச் செய்து, கம்பி கட்டி உலர்த்தி பத்து வராட்டியில் காற்றில்லாத இடத்தில் புடம் போடவும். ஆறிய பிறகு மருந்தை எடுத்துக்கொண்டு முன் சித்தப்படுத்திய பாடாணக் குகைக்குள் சுத்தி செய்த பாதரசம் விராகனிடை 20-விட்டு அதன் மேல் புடமிட்டெடுத்த வெள்ளிக்காடிக்கார பற்பத்தைப் பொடித்துப் போட்டு அதன் மேல் "கோடகசாலை இலை" யைக் கசக்கிப் பிழிந்து சில்மூடி மேற்கூறிய உப்பு உருண்டைப் பள்ளத்தில் வைத்து அமுக்கி-உப்பு பெரும் மணிகளாகப் பொறுக்கி எடுத்துக் குகை தெரியாமல் மூடி மறைத்து, வாய் பொருந்தியதான மேல் சட்டி மூடிக் கெட்டியாகச் சீலை மண் செய்து உலர்த்தி வட்டடுப்பில் வைத்து தீபாக்கினியாக மூன்று சாமமும், கமலாக்கினியாக மூன்று சாமமும், காடாக்கினியாக மூன்று சாமமும் எரித்து நன்ருய்க் குளிர ஆறிய பின் இறக்கி கவசம் பிரித்து மேற் சட்டியில் பற்றியிருக்கும் பதங்கத்தை பன்றி மூடியால் சுரண்டி எடுத்துப் புட்டியில் அடைக்கவும்.

அளவு: இந்தச் சுண்ணத்தில் அரிசி எடை எடுத்து அரைத்த சுக்கு, அரைத்த மிளகு, பனைவெல்லம், கரும்பு வெல்லம் ஏதேனுமொன்றில் அனுபானித்து காலை, மாலை இரு நேரம் 3 முதல் 5 நாட்களுக்கு முழுங்கச் செய்யவும் முழுங்கச் சக்தியில்லாதவர்களுக்கு தாய்ப்பாலில் அனுபானித்துக் கொடுக்கலாம்.

**தீரும் நோய்களாவன :** இதனை எல்லா நோய்களுக்குமே ஒன்றிரண்டு வேளை கொடுத்து அப்பால் அந்தந்த நோய்களுக்குரிய மற்ற மருந்துகளை உபயோகிக்கலாம். மரணத்தைத் தடுத்துப் பிணிகளின் கொடூரத்தைத் தணிக்கும் பொருட்டு இவ்விதம் இதனை பயன் படுத்துகிருர்கள். மற்றப்படிக்கு சன்னி, சுரம், வாய்வு, கபமடைப்பு, வாதநோய், சூலைநோய், குன்மம், மூர்ச்சை, புற்று நோய், பெருவியாதி, வலி முதலிய நோய்கள் கொடூரம் தணிந்து குணமாகும். எல்லாவித நோய்களுக்கும் அனுபானம் அறிந்து கொடுக்கலாம். தயக்கம் வேண்டாம். கை கண்ட மருந்து. கோஷாயிமுறை.

பத்தியம்; நோய்களுக்கேற்ப பத்தியம் வைப்பது உத்தமம். வெள்ளாட்டு வற்றல், வருத்த உப்பு சேர்க்கலாம். புளி, புகை, புகையிலை, வாய்வு பண்டங்கள் கூடா.

குறிப்பு: (1) மேல் சட்டிக்கு முள்முருக்கு இலையை இடித்துச் சாறுபிழிந்து பொட்டில்லாமல் (Pores) பூசிக்கொள்ளவும்.

(2) இக்காடிக்கார சுண்ணம் கொடிய காரமாகயிருக்கும். வாய்பிடிக்காது. எல்லாப் பிணிகளுக்கும் இம் மருந்து கொடியதான வைரி போன்றது இம்முறை புத்தகங்களில்லை.

கோஷாயிமுறை - ஒரு பெரியவாள் சொல்லக் கேட்டு பரம்பரையாக கையாண்டு வந்தது. கைகண்ட மருந்தெனக் கூறுவர்.

---

# தூம்பிலாச் சுரப்பியலில் மூளையடிச் சுரப்பியின் ஆட்சி.

# (The Role of Pituitary in Endocrine Systems)

Dr. ப. அ. முகம்மது இக்பால், B. I. M., II M. D.

தூம்பிலாச் சுரப்பிகள் உயிர்வாழ்வதற்கு இன்றியமையாததாகும். இச் சுரப்பிகளிலிருந்து சுரக்கும் சுரப்புகளானது நேரிடையாகக் குருதியில் கலக்கின்றன. அதன் மூலம் உடலின் பல பாகங்களுக்குக் கொண்டுசெல்லப்பட்டுச் செயல்படுத்தப்படுகின்றது. சுரப்புகளானது எவ்விதக் குழல்களின் துணையுமின்றி நேரிடையாகக்குருதியில் கலப்பதால் இவற்றிற்கு "தூம்பிலாச் சுரப்பிகள்" என்று பெயர் நமது உடலில் கீழ்காணும் தூம்பிலாச் சுரப்பிகள் காணப்படுகின்றன.

1 மூளையடிச் சுரப்பியின் முன் பின் அறைகள் [The Anterior and Posterior Pituitary]

2 கேடயச் சுரப்பி [Thyroid]

3 துணைக்கேடயச்சுரப்பி[Parathyroid]

4 அட்ரீனல் கார்டெக்ஸ் & மெடுல்லா பகுதிகள் [The Adrenal Cortex and Adrenal Medula]

5 கணையத்தின் அகச் சுரப்பிகள் [Internal secretion of pancreas islets of langer hans]

6 இனப்பெருக்கச் சுரப்பிகள் (விதைகள் & சினை முட்டைப் பகுதி) [The Ovary and testis]

1 முதல் 5 வரையுள்ள சுரப்பிகளின் சுரப்புகள் உடலின் வளர்சிதை மாற்றத்திற்கு (Metabolism) அவசியமாகின்றன. இறுதியுள்ள சுரப்பி இனப்பெருக்கத்திற்கு இன்றியமையாதனவாகும். இவை தவிர உடலில் சில முக்கியப் பகுதிகளில் திசு இடைப் பகுதிகளின் மாற்றத்தின் போது சில சுரப்புகள் காணப்படுகின்றன. ஆனால் அவை அவ்விடத்திலேயே மாற்றமடைந்து விடுவதால் அதனை இத் தலைப்புகளின் கீழ் இணைப்பதில்லை. அதனைத் தற்காலிக சுரப்புக்கள் (Local hormones) என அழைப்பர். (உ-ம்) அசிடைல்கோளின் [Acetylcholine.]

இச் சுரப்பிகளைச் கற்பதன் நோக்கம் இவை வாழ்க்கைக்கு இன்றியமையாத வகையில் விளங்குகின்றன என ஆய்வில் வரை முறைப் படுத்தியுள்ளனர். உதாரணமாக சில சுரப்பிகளை உடலிலிருந்து நீக்கும்போது அதன் விபரீத மாற்றங்களைக் காணமுடிகிறது

சுமார் 10 வயதுள்ள (Before puberty) ஒரு பையனுடைய ஆண் இன உறுப்புச் சுரப்பியை நீக்குவதன் மூலம் அவன் எதிர் காலத்தில் பல இன்னல்களுக்கு ஆளாகிறான். அவன் வாலிபப் பருவம் அடைந்த பின்னும் அதற்குரிய குறிகள் அவனிடம் காணப்படுவதில்லை. எடுத்துக்காட்டாக குரல் மாற்றம், மீசை, தாடி மயிர் வளர்ச்சி குறைவு, இன உறுப்பு மற்றும் அக்குள்,

மார்பு இவற்றில் மயிர் வளர்ச்சி குறைவு பட்ட அல்லது காணப்படாத நிலை ஏற்படுகின்றது. அடுத்து கேடயச் சுரப்பியை நீக்குவதன் மூலம் 'மிக்ஸ் எடிமா' (Myxoedema) என்ற நோய் நிலை ஏற்படுதலும் அடுத்து துணைக் கேடயச் சுரப்பியை நீக்குவதன் மூலம் "வில்வாத சன்னி" (Tetanus) என்ற நோயும் ஏற்படுகின்றன.

மேலே கூறப்பட்ட சில சுரப்பிகளை நீக்குவதன் மூலம் சில மாறுபட்ட குறிகுணங்களைக் காணமுடிகிறது. ஆனால் அதன் பின் நீக்கப்பட்ட சுரப்பியின் சுரப்பை (Hormones) மீண்டும் செலுத்துவதன் மூலம் தன் இயற்கை நிலையை அடைகின்றன. உதாரணமாக கணையம் என்ற சுரப்பியினை (Pancreatectomy) நீக்குவதன் மூலம் நீரிழிவு நோயை (Diabetic mellitus) உருவாக்க முடிகின்றது. ஆனால் அதன் பின் "இன்சுலின்"(Insulin) என்ற சத்தினை ஊசியின் மூலம் உடலில் செலுத்துவதனல் நீரிழிவு நோயைக் கட்டுப்படுத்த முடிகிறது. இதிலிருந்து இச் சுரப்பிகளின் இன்றியமையாமை நன்குதெரிய வருகின்றது. இது பற்றி விலங்கினங்களில் வரையறுத்த முடிவுகளைக் கண்டுள்ளனர். இச் சுரப்பியினுடைய சுரப்புகளைப் பற்றியும் வரையறுத்த ஆராய்ச்சிகள் செய்துள்ளனர். உதாரணமாக மூளையடிச் சுரப்பியின் முன் பகுதிச் சுரப்பு புரதப் பொருட்கள் (Proteins) நிறைந்ததும், அட்ரீனல் இனப்பெருக்கச் சுரப்பிகளின் சுரப்புகள் "ஸ்டீராய்ட்ஸ்" (Steroids) என்றும் வரைமுறைப்படுத்தியுள்ளனர். சுரப்பிகளில் பெரும்பாலானவை நரம்பு இயக்கக் கட்டுப்பாட்டின் கீழ் பணிபுரிகின்றன. (Sympathetic and Parasympathetic components of Autonomic Nervous System)

இவ்வாறு சுரக்கின்ற சுரப்புக்களானவை தன் அளவில் கூட்டியோ அல்லது குறைந்தோ சுரக்குமானல் அதன் மாறுபட்ட தன்மைகளைக் காணமுடிகிறது. உதாரணமாக கேடயச் சுரப்பி (thyroid) அதிகமாகச் சுரப்பதன் காரணமாக (From Adrenal Cortex)"குசிங் சிண்ட்ரோம்" (Cushing's syndrome) என்ற நிலையும், குறைவுபட்டுச் சுரப்பதன் காரணமாக "அடிசன்ஸ்" நோயும் [Addison's Disease] ஏற்படுகின்றன. இப்படிக் காணும் சில குறிப்பிட்ட குறிகுணங்களைக் கொண்டு நோயை எளிதில் கணிக்க முடிகின்றது. இச் சுரப்பிகள் இருக்கும் இடங்களில் ஏற்படும் கட்டிகளின் வளர்ச்சியின் காரணமாக சில நிலைகளில் இச் சுரப்பிகள் மிகுந்து அல்லது குறைவு பட்டுச் சுரக்கின்றன. இது போன்ற நிலைகளில் இச் சுரப்பிகளை நீக்க வேண்டிய அவசியம் ஏற்படுகின்றது. அல்லது சுரப்புத் தன்மை அதிக அளவில் குறைவு படும்பொழுது அதனை ஈடுகட்ட ஊசி மூலம் இச் சுரப்பினைச் செலுத்த வேண்டிய நிலை ஏற்படுகின்றது. (உதாரணம்) மதுமேக நோய்க்கு "இன்சுலினை" ஊசி மூலம் செலுத்துதல்.

மூளையடிச் சுரப்பி:- (Pituitary Gland)

இச் சுரப்பி முன் பகுதி, பின் பகுதி என இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு இருக்கின்றது. முன் பகுதியானது சுரப்பிக் கோளங்களால் அமையப்பட்டு இருக்கின்றது. இச் சுரப்பியின் எடை சுமார் 0.5 கிராம். இதில் முற்பகுதியில் 75%ம் பிற்பகுதியில் 25%ம் அமையப்பட்டிருக்கிறது. இவை இரண்டும்

மைய நரம்பு மண்டலத்தால் (C.N.S) கட்டுப்படுத்தப் படுகின்றன. இவ்விரண்டு அமைப்புக்களும் தன்னுடைய செயல், அமைப்பு, வளர்ச்சி இவற்றில் முற்றிலும் மாறுபட்டு இருப்பதால் இவை ஒவ்வொன்றையும் தனிமைப் படுத்தி வரையறுக்கப்பட்டு இருக்கின்றது.

**பின் அறைப்பகுதி:-(Neurohypophysis)**

இப்பகுதி முற்றிலும் நரம்பு மண்டலங்களால் ஆக்கப்பட்டது. தனக்குத் தேவையான ஊட்டத்தைக் குருதிக் குழல்கள் மூலம் பெறுகின்றன. இதில் சுரப்புத் தன்மையைக் கொடுக்கக் கூடிய பகுதிகள் எதுவும் கிடையாது. நரம்புகளானவை மூளையிலுள்ள "ஹைப்போதலாமஸ்" (Hypothalamus) என்ற பகுதியில் இருந்து தொடங்கி பார்வை யுகத்தின் வழியாகக் கீழ் இறங்கி மூளையடிச் சுரப்பியலின் பிற்பகுதியில் இணைகின்றன. இந்நரம்புப் பகுதியில் ஒரு வகையான சுரப்புக் காணப்படுகிறது.

இச்சுரப்பினை "ஆண்டி டையூரடிக் சுரப்பி" (Anti-diuretic hormone) என்பர். இச் சுரப்பானது சிறு நீர்ப் பிரிவைக் கட்டுப்படுத்துகின்றது. உடலில் நீர்ச்சத்துக் குறைந்திருக்கும்போது இச்சுரப்பியானது மிகுதியும் தேவைப் படுகிறது. இச்சுரப்பானது பின் அறைப் பகுதியில் சேர்த்து வைக்கப் பட்டுத் தனக்கு வேண்டும்போது உடலுக்குச் செலுத்தப்படுகிறது. இச் சுரப்பானது நரம்பு மண்டலத்தால் கட்டுப்படுத்தப்படுகிறது. இதனைக் கட்டுப் படுத்தும் நரம்பானது துண்டிக்கப்படுமானல் நீரிழிவு நோய் ஏற்படும். இந் நோயினர் வெளியிடும் நீரில் சர்க்கரைச் சத்து இராது. ஆனல் சிறு நீரானது அளவு கடந்தும் பழு எடை குறைந்தும் வெளிப்படும் (Poly urea, low sp. gravity) இதனை அதி மூத்திரம் என்பர் (Diabetes insipidus) இச்சுரப்பியிலிருந்து "வாசோப்பு ரோசின், ஆக்ஸிடோசின்" ஆகிய இரு சத்துக்களும் சம அளவில் அடங்கி இருப்பதாகக் கண்டு பிடித்துள்ளனர்.

**இதன் முக்கியத்தொழில்கள் (Functions)**

1 வாசோபுரோசின் சத்து (Vasopressin or A D H)

சிறு நீர்ப்பிரிவைக் கட்டுப் படுத்துகிறது. அதன் மூலம் உடலிலுள்ள தண்ணீரின் அளவைக் கட்டுப் படுத்துகின்றது. இச்சத்தினை அதிக அளவில் உடலில் செலுத்தும்போது குருதிக் குழலை சுருங்கச் செய்து குருதி அழுத்தத்தை உயர்த்துகின்றது. ஆனல் இயற்கை நிலையில் இது போன்ற நிலைகளில் எவ்விதக் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சிகளும் காணப்படவில்லை.

2 ஆக்ஸிடோசின் சத்து: (Oxytocin)

இச்சத்தானது மகவை ஈன்ற தாய்க்குச் சுரந்த பாலை வெளிப்படுத்துவதற்குத் தூண்டுகிறது. மேலும் மகப்பேற்றின்போது ஏற்படும் மிகுந்த காலத் தடையை நீக்கி கருப்பையைத் துரிதமாகச் சுருங்கச் செய்கிறது

3 முன் அறைப் பகுதி: (Anterior Pituitary or Adenohypo physis)

இது மூளையடிச் சுரப்பியின் துவக்க நிலையில் ஆரம்பமாகிறது. இது ஒரு பெரிய குருதிக் குழல்களால் வலைப் பின்னல் தசைத் திசுக்களால் ஆக்கப் பட்ட பகுதியாகும். இவ்விலங்கள் இரு வகைகளாகப் பிரிக்கப்பட்டு இருக்

கின்றன அவை: 1. சிறு விலங்கள் [Chromophopes-small cells] 2. பெரு விலங்கள் [Chromophiles-larger cells]

"குரோமோபில்" விலம் அதனுடைய வண்ணம் பெறும் தன்மையைப் பொறுத்து இரண்டாகப் பிரிக்கப்படுகின்றன. அவை (1) அசிடோபில்ஸ் (ஈஸ்னேபில்ஸ்) (2) பேசோபில்ஸ் எனப்படும். இவை 75% அசிடோபில்ஸ் களாலும், 25% பேசோபில்ஸ்களாலும் அமைக்கப்பட்டு இருக்கின்றன. இவ் விலங்களில் சிறு சிறு குருணைகள் (Granules) காணப்படும். "குரோமோபோப்" விலங்களானவை குருணைகளைப் பெறும்போது "குரோமோபில்" விலங்களாகவும் குருணைகளை இழக்கும்போது "குரோமோபோப்" ஆகவும் மாறும் தன்மை பெற்றுள்ளன.

இனி "குரோமோபில்" விரிவதைப் பற்றி ஆராய்வோம். இதன் உட்பிரிவாகிய 'அசிட்டோபில்'லைப் பற்றிக் கவனிப்போம். இவ் விலத்திலிருந்து சுரக்கும் சுரப்பானது உடல் வளர்ச்சிக்கு (Growth hormones) இன்றியமையாததாகும். இவ் விலங்களில் ஏற்படும் சுரப்பானது குறைவு படுமானால், குள்ளமாக இருத்தல், மூளையடிச் சுரப்பு முற்றிலும் குறைவு பட்ட நிலை போன்ற நிலைகளும், அதன் மிகுசுரப்பின் காரணமாக உடல் இராட்சச வளர்ச்சி (Gigantism) பெறுதல் அல்லது "அக்ரோமெகாலி" (Acromegaly) போன்றன ஏற்படும். பெண்களின் பால் உற்பத்தியைப் பெருக்கும்.

இது தவிர பிற சுரப்புக்களை "பேசோபில்" விலங்கள் சுரக்கின்றன. அவைகளாவன: (1) குனடோ டிரோபின்ஸ் (Gonado tropins) (2) தைரோடிராபின் (Thyrotrophin) (3) கார்டிகோ டிராபின் (A C.T H.) இச்சுரப்புகளானது மைய நரம்பு மண்டலக் கட்டுப்பாட்டால் (C N S.) தூண்டப்படுகிறது. இவை "பேசோபில்" விலங்களால் நெருக்கமாக இணைக்கப்பட்டுள்ளன.

**மூளையடிச் சுரப்பியின் முன் அறைப் பகுதியின் முக்கியத் தொழில்கள்:-**

இப் பகுதியின் சுரப்பானது உடலில் முக்கிய அங்கம் வகிக்கிறது. இது உடலில் உள்ள என்பு, சதை இவைகளின் வளர்ச்சியைக் கட்டுப் படுத்துகிறது. புரதச் சத்து, கொழுப்பு, கார்போஹைடிரேட் இவைகளின் வளர்சிதை மாற்றத்தை ஒழுங்கு படுத்துகிறது. உடலில் பருவமாற்றம், வளர்ச்சி, அறிவாற்றல், மற்றும் அட்ரீனல் கார்டெக்ஸ், கேடயச் சுரப்பி, ஆண் பெண் இன உறுப்புக்கள், பால் சுரப்பு இவைகளை தன்னுட்சிக்கு உட்படுத்திக் கொள்கிறது. இச் சுரப்பியிலிருந்து ஆறு வகையான சுரப்புப் பொருட்களை ஆய்வின் மூலம் பகுத்துள்ளனர். அவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையில் செயல்படுகின்றது.

1. உடல் வளர்ச்சிக்குத் தேவையான சுரப்பு (Growth hormone) (S. T. H.)

2 அட்ரீனல் சுரப்பியினைத் தூண்டும் சுரப்பு (Adrenocortico Trophic Hormone) (A C T H)

3. கேடயச் சுரப்பியினைத் தூண்டும் சுரப்பு (Thyroid Stimulating Hormone) (A. S. H.)

4 பால் சுரப்பினைத் தூண்டும் சுரப்பு (Prolactin) (Lactogenic Hormone)

5. இனப் பெருக்கச் சத்து (Gonadotrophic Hormone)

6. சினைப்பைத் தூண்டிச் சத்து
(Follicle Stimulating Hormone)

பால் சுரப்பிச் சத்தானது பெண் கருக் கொள்ளாமல் இருக்கும் காலத்தில் மாத விடாயை முறைப்படி செயல் படுத்தலாமென எண்ணப்படுகிறது.

மூளையடிச் சுரப்பியை உடலில் இருந்து நீக்கும் பொழுது ஏற்படும் மாறுபட்ட குறி குணங்கள்:- (Hypophysectomy)

விலங்கினங்களில் மூளையடிச் சுரப்பியை நீக்கிய பின் காணும் குறி குணங்களைத் தெளிவாக விளக்கியுள்ளனர். சில நிலைகளில் புற்று நோயின் காரணமாகவும் இதை நீக்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. அப்படி நீக்கினல் தான் மேலும் சில காலம் உயிர் வாழ முடியும். 'சிம்மன்ஸ்' நோயில் (Simmond's disease) மூளையடிச் சுரப்பியின் சுரப்புத் தன்மை மிகவும் குறைவு பட்டுக் காணப்படும். இந்நிலையானது பெரும்பாலும் மகப்பேற்றின் பின் ஏற்படும் குருதிப் பெருக்கின் (P. P. H.)பிற்பட்ட நிலையாகவே காணப்படுகிறது. மூளையடிச் சுரப்பி நீக்கப் படும்போது அதன் ஆட்சிக்கு உட்பட்டச் சுரப்புகளின் சுரப்புத் தன்மையும் மாறுபட்டுச் செயல் படுகிறது.

I இள விலங்குகளில் (Young animals)வளர்ச்சி பாதிக்கப்படுகின்றன. முதிர்ந்த விலங்குகளில் (Adult animals) இந்நிலை காணப்படுவதில்லை.

II கேடயச் சுரப்பி சூம்பலடைதல் (Thyroid atrophies) அதைத் தொடர்ந்து உடலில் பல மாற்றம் காணப்படுதல் அக்குறிகுணங்களாவன: உடம்பு தடித்துக் காணப்படல் (Myxoedema), பிசிதப் புரதத்துடன் கலந்த அயோடின்சத்துக் குறைவுபடல் (Serum protein bound iodine falls). உடலில் வளர்சிதை மாற்றம் குறைவுபடல் (B. M. R. decreases), பிசிதத்திலுள்ள "கொலஸ்டிரால்" அதிகப்படல் (Serum cholestrol rises),கேடயச்சுரப்பியானது தனக்கு வேண்டிய அயோடினை உபயோகப் படுத்த முடியாத நிலை ஆகியவை ஏற்படும்.

III இள விலங்கினங்களில் இச் சுரப்பி நீக்கப்படும்போது இனப்பெருக்க உறுப்புக்கள் வளர்ச்சியடையாமலேயே இருக்கின்றன. முதிர்ந்த விலங்கினங்களில் இனப் பெருக்க உறுப்புக்கள் சூம்பலடைகின்றன. மேலும் ஆண்களின் ஆண் இன கரு உற்பத்தி பாதிக்கபடுகின்றது (Spermatogenesis). பெண்களில் பெண் கரு முட்டை உற்பத்தியும், மாதவிடாய் சுழற்சியும் (Ovlalion & Menstrualcycle) பாதிக்கப்படுகின்றன. இதன்பிற்பட்ட நிலைகளாக புறக்கரு உற்பத்தி உறுப்புக்களில் மயிர் வளர்ச்சி குறைவுபடல், மார்பு, அக்குள், இவற்றில் மயிர் வளர்ச்சியின்மை ஏற்படுகின்றன.

IV குருதியிலுள்ள சர்க்கரைச் சத்து (Blood Glucose) குறைவு பட்டுக் காணப்படல், உடலில் "இன்சுலின்" சத்திற்கு எதிர்ப்பு விளைவுகள் குறைவு பட்டுக் காணப்படுதல்.

V அதி மூத்திரம் ஏற்படுதல் (Diabetic insipidus)

மருத்துவத் துறையில் சில நிலைகளில் மூளையடிச் சுரப்பியை நீக்கும்படி அறிவுரை கூறும் நிலைகளாவன:-

1 நகிற் புற்று (Cancer of the Breast)
2. ஆண்களின் புரஸ்த கோளப் புற்று (Cancer of prostate gland)

3. மதுமேக நோய் (Diabetic mellitus)

அடுத்து ஒரு நோயாளிக்கு மிகுந்த அளவு நீரிழிவு (Diabetic mellitus) ஏற்படுகின்றது என்ற நிலையை முதற் காரணமாகக் கொண்டார்கள் அது பெரும் பாலும் மூளையடிச் சுரப்பி யில் ஏற்படும் புதுக்கட்டிகளின் வளர்ச்சி யால் (Tumour) ஏற்பட்ட நிலையாகும். இந் நிலையில் அச் சுரப்பியை நீக்குவது (Hypophysectomy)சிறப்புடையதாகும்.

ஆய்வுக்கூட முடிவுகள்:(Experimental evidences)

விலங்கினங்களில் மூளையடிச் சுரப்பியை நீக்கிய பின் அதன் வளர்ச்சி குறைவு படுகிறது. அதன் பின் அச் சத்தினை ஊசியின் மூலம் கொடுப்பதன் மூலம் இழந்த வளர்ச்சியைப் பெற முடிகிறது.

இயற்கை நிலையிலிருக்கும் இள விலங்கினத்திற்கு இச் சுரப்பிச் சத்தை ஊசியின் மூலம் கொடுப்பதன் மூலம் மிகு வளர்ச்சி காணப்படுகிறது.

இச்சுரப்பியின் சுரப்பில் மாறு பட்டத்தன்மை ஏற்படுமானல் நோயாளியிடம் காணும் குறி குணங்கள்:-

குறை சுரப்புத் தன்மை (Hypopituitarism)

1. சிமான்ஸ் நோய் (Simmond's Disease)

2 உடலில் காணப்படும் சிலமாறுபட்ட தன்மைகள்:

(அ) உடலில் என்புகளின் குறைந்த வளர்ச்சி.

(ஆ) காமம் குறைதல்.

(இ) தோல், மயிர் இவற்றில் மாறு பட்ட தன்மை காணப்படல்.

ஆண்களுக்கு மீசை, தாடி, அக்குள், மார்பு இவற்றில் மயிர்வளர்ச்சி குறைவு பட்டுக் காணப்படல், இன உறுப்பில் மயிர் வளர்ச்சி மாறுபட்டுக்காணப்படல், குழந்தைப் பருவமாக இருந்தால் தோலானது மெல்லியதாகவும், மிருது வானதாகவும் இருத்தல், வாலிபப் பருவத்தில் கொழுப்புச்சத்து மிகுந்து காணப்படல் போன்ற நிலைகளாகும்.

(ஈ) அறிவாற்றல் குறைவு படல்.

(உ) வளர்சிதை மாற்றம் குறைவுபடல் (B. M. R.).

(ஊ) நீரிழிவு நோய் ஏற்படல் (Poly-urea - Diabetic insipidus)

3. உடல்மிகு வளர்ச்சி அல்லது மாறு பட்ட தன்மை காணப்படல்.

சுரப்புத் தன்மை (Hypopituitarism in childhood) குறைவுபட்ட நிலை யில் குழந்தைகளிடம் பெரும் பாலும் காணப்படும் குறி குணங்கள்:-

1 'பார்ளிக்ஸ் சிண்ட்ரோம்' (Forlicr's Syndrome), குட்டையாகவும், மந்த புத்தியுடனும் காணப்படல் (Shunted and quite idiotic), கரு உறுப்புக்களா னவை சிறுத்தும் அவற்றில் கொழுப்பு மிகுதியாகப்படிந்தும் காணப்படல்.

மருத்துவக் கூடச் சான்றுகள் :- (Clinical evidences)

மூளையடிச்சுரப்பி அதிக மாகச் சுரந்தால் அதனை மிகு சுரப்பு (Hypopituitarism) என்பர் குறைவு பட்டுச் சுரந்தால் சுரப்பு குறைவு பட்ட நிலை (Hypopituitarism) என்பர். இள வயதுடையவர்களுக்கு இச் சுரப் பானது குறைவு பட்டுச் சுரக்கும்போது உடலில் இயற்கை வளர்ச்சி மாறு பட்டுக்காணும் (குள்ளன் - Dwarfism) மிகுதியாகச் சுரக்கும்போது, நோயாளி யினுடைய வயதுக்குத் தகுந்தபடி மாறுபட்டுக் காணும்.

1. மூளையடிச் சுரப்பி மிகுதியாகச் சுரந்த நிலை (Hyper pituitarism)

உடலிலுள்ள எலும்புகள் ஒன்றுடன் ஒன்று இணைவதற்கு முன் இச் சுரப்பானது அதிகமாகக் காணப்பட்டால் எலும்புகளுடைய வளர்ச்சி மிகுதிப் பட்டு உயரமாகக் காணப்படுவார்கள். சுமார் 7 முதல் 8 அடி உயரம் வரை இருப்பார்கள். இதனை (Gigantism) பூத வளர்ச்சி என்பர். உடலிலுள்ள எலும்பு கள் ஒன்றுடன் ஒன்று இணைந்த பின் இச்சுரப்பானது அதிகமாகக் காணப் பட்டால் "அக்ரோமெக்காலி" (Acro magaly) என்ற நிலை ஏற்படும். இந்நிலையில் உடலின் சில பகுதி எலும்புகள் மிகு வளர்ச்சி அடைந்து காணப்படும். (உதாரணம்) மேல் தாடை, கீழ் தாடை எலும்புகள் வளர்ச்சி அடைதல், பற்களுக்கு அடியில் இடை வெளி காணப்படல். கை, கால்கள் மிகுந்து நீண்டு காணப்படுதல், கையைக் கொண்டு நிமிர்ந்து நின்ற நிலையிலே காலைத் தொட முடிதல் போன்ற நிலைகள் ஏற்படும். தோல் தடித்துக்காணப்படும். இந்நிலை சுமார் 25 வயதுக்கு மேற்பட்டவர்களிடம் படிந்து காணப்படல்.

2. லொரைன் டைப் (Lorain type)

அறிவு வளர்ச்சி, உடலின் வளர் சிதை மாற்றம் இவற்றில் எவ்வித மாறு பாடும் காணப்பட மாட்டாது. எலும்பு வளர்ச்சி மிகுதியாகப் பாதிக்கப் பட்டுக் காணப்படும். இனப் பெருக்க உறுப்புக் கள் வளர்ச்சி அடையாமல் இருக்கும் அல்லது காணப் படாத நிலை. ஆனல் நடுத்தர வயதை அடைந்த பின்னும் அவர்கள் குழந்தைப் பருவம்போல் அழகாக இருப்பார்கள்.

**மூளையடிச் சுரப்பியில் கட்டி வளர்ச்சி ஏற்படும்போது உடலில் காணப்படும் மாறுபட்ட தன்மைகள்.**

1. 'டெம்பரல்' பகுதியிலுள்ள பார்வை பாதிக்கப்படல் அல்லது ஒரு கண்ணின் பார்வை நரம்பு பாதிக்கப் படல் (Optic nerve atrophy)

2. மதுமேகம் காணப்படல்(Glycosuria-leads to Diabetic mellitus)

3. தோல் இடைப்பகுதியில் கொழுப்புச் சத்து மிகுதிப்பட்டு அவை தடித்தல் (உதாரணம்) மூக்கு, உதடு, காது, மண்டை, கை, கால் போன்ற பகுதிகள்.

4. உடலில் வியர்வை மிகுதியாகக் காணப்படல்.

ஒப்பு நோக்கப்பட்ட நூற்கள்

1. உடலியங்கியல் - மதுரை மருத்து வக் கல்லூரி வெளியீடு.

2. உடல் தத்துவம் - டாக்டர். வேணுகோபால்

3. Samson & Wright's Applied Physiology.

4. Review of Physiological Chemistry - By A. Harper

5. Text Book of Biochemistry by West & Todd.

———

# நட்பு

ஜெயபால், முதலாமாண்டு பி. ஐ. எம்.

— ★ —

1. மனம் விரும்பும் மங்கையினை மணப்பே னென்று
மணவழகன் கொள்கின்ற காதல் நட்பு
இனத்தவர்கள் குடிக்கின்ற போதே தானும்
இனிப்பாகக் குடிப்பதுவே குடியின் நட்பு

மனம்புரண்டு கட்சிவிடேன் என்று (உ) ரைத்தும்
மறுநாளில் கட்சிமாறும் அரசியல் நட்பு
இனம் உலகில் இதுவரையில் தூய நட்பை
யான் காணேன் என்றுண்மை நட்பைக் காண்பேன்!

2. நட்பினிலே உண்மையில்லை இனிமை இல்லை
நடப்பவைதான் உண்மையென்ருல் நம்ப மாட்டேன்
நட்பினையே சாடுகிறேன் நடிப்போர் நட்பை
நட்பென்று நானென்றும் ஒப்ப மாட்டேன்

தட்பமான வார்த்தையிலே தேனை வைத்து
தரமான நடிப்பதிலே அன்பைக் காட்டி
உட்பகையை வளர்க்கின்ற உலுத்தர் தம்மின்
உரமற்ற நட்பினுக்கே விடைகொ டுப்பேன்.

சிறு கதை

# மன்னிக்க வேண்டுகிறேன்!

**" சித்ரா மணாளன் "**

[இந்த சிறுகதையின் ஆசிரியர் சித்ரா மணாளன் ''ராம்ஜி'' என்ற பெயரில் ஏராளமான சிறுகதைகள் எழுதி இருக்கிறார். அவரது முதல் தொடர்நாவல் '' அகிலா '' ''தினத்தந்தி'' நாளிதழில் வெளியாகி பரபரப்பூட்டியது. '' கண்ணிலே நீர் எதற்கு? '' '' அவளைச் சுற்றி ஐந்து பேர் '' ஆகிய நாடகங்கள் அவரது வெற்றிப் படைப்புகள். சுவையான அவரது சிறுகதையை இங்கே படியுங்கள் !]



நான் இன்று மாலை ஊர் புறப்பட வேண்டும்.

கடந்த இரண்டு நாட்களாக நண்பன் வீட்டில் விருந்து. இரண்டு நாட்களிலும் என் நண்பன் பாலுவின் உபசரிப்பில் நான் திக்கு முக்காடி விட்டேன்.

ராணுவ சேவையை முடித்துக் கொண்டு நான் சென்னை சென்ட்ரல் ரெயில் நிலையத்தில் இறங்கியதும், பாலு தற்செயலாக என்னைப் பார்த்தான். வீட்டுக்கு வந்தால் தான் அயிற்று என்று முரண்டு பிடித்தான். பாலிய சிநேகிதம். வேறு வழியில்லை. 'சரி' என்று ஒப்புக் கொண்டு அவன் வீட்டிற்குப் போனேன்.

போகிற வழியிலேயேயே அவன் கேட்டான். "ஏண்டா, உனக்கு கல்யாணம் ஆகி விட்டதா?" என்று

"இத்தனை காலமும் ராணுவத்தில் இருந்து விட்டேன். இனிமேல் தான் கல்யாணம்காட்சி எல்லாம்" என்றேன்

"இடையில் உன்பெற்றோர்உனக்கு பெண் பார்க்கவில்லையா?'' என்று பாலு கேட்டான்.

"பார்த்தார்கள். ஆனால் ஏனோ கல்யாணம் கூடவில்லை" என்ற என் பதில் கேட்டு, கொஞ்சம் ஆச்சரியம் அடைந்த அவன் சற்றுநேரம் மவுனமாக இருந்தான்.

நாங்கள் அமர்ந்திருந்த டாக்ஸி கடற்கரை சாலையில் வேகமாக ஊர்ந்து கொண்டு இருந்தது

எத்தனை தடவை பார்த்தாலும் சலிக்காத கடற்கரை!

நான் பாலுவிடம் கேட்டேன். "உனக்கு எத்தனை குழந்தைகள்?"

அவன் பொங்கிக்கொண்டு சிரித்தான். நான் புரியாமல் விழித்தேன்.

பிறகு அசடு வழிய, "ஏண்டா, சிரிக்கிறே? " என்றேன் அவன் ''இன்னும் எனக்குத் திருமணமே ஆக வில்லையே. பிறகெப்படியடா குழந்தை?" என்று கூறி மீண்டும் சிரித்தான்.

"சிரிக்காதேடா, இரண்டரைகழுதை வயசாகிறது. இன்னும் கல்யாணமே ஆகலே என்றால் நீ சரியான அபிஷ்டு, போ" என்றேன்.

"ஈயத்தைப் பார்த்து இளித்ததாம் பித்தளை. எனக்கு இரண்டரைக் கழுதை வயதென்றால் உனக்கு" என்று அவன் திருப்பித் தாக்கினான்.

'டேய்... நான் ராணுவத்திலேயே இருந்து விட்டதால் திருமணத்தில் அதிக அக்கறை காட்டவில்லை ஆனால் உன் நிலை அப்படி அல்லவே. நீ இன்னமும் தனிக்கட்டையாகவே இருக்கிறாய் என்றால் அதற்கு ஏதாவது தனிக் காரணம் இருக்கவேண்டும்'' என்றேன்.

அவன் முகத்தில் கவலை தோய்ந்தது. கண்களில் நடனமிட்ட குறும்பு மறைந்து சோகம் நிழலாடியது.

ஒரு நீண்ட பெருமூச்சுக்குப் பிறகு, "ஒரு சபதம் போட்டு இருக்கிறேன். அது நிறைவேறிய பிறகுதான் எனக்கு திருமணம்" என்ருன்.

நான் அவனை நிமிர்ந்துபார்த்தேன் என்ன சபதம் என்று அறிந்து கொள்ளும் ஆவலில். அதற்குள் பாலு வின் வீடு வந்து விட்டது.

"மனேகர் இறங்கு. மற்றவற்றை சாவதானமாக பேசுவோம்!"

நண்பனின் அன்பு ஆணைக்கு கட்டுப்பட்டு பெட்டிப் பாம்பாய் அவன் பின்னல் இறங்கினேன். சாமான்களும் இறக்கப்பட்டன.

நண்பன் கதவைத் தட்டினன்.

"சீதா! சீதா!"

கதவு திறக்கப்பட்டது..

வாசலை "பிரேம்" ஆக்கிக் கொண்டிருந்தாள் ஒரு பெண். வயது முப்பதை நெருங்கிக் கொண்டிருக்கலாம். என்ருலும் நல்ல அழகி.

அவள் பார்வை என்மீது ஒரு கணம்தான் பதிந்து இருக்கும். உடனே திரும்பிக்கொண்டு நடக்கலானுள். கை தானகவே முந்தானையை இழுத்து தோளில் சுற்றி போர்த்திக் கொண்டது.

'சீதா!' - அண்ணனின் குரல்கேட்டு அந்த அன்னம் திரும்பினள். ஆனல் பார்வை நிலம் நோக்கி இருந்தது

'சீதா! இவன் என் பாலிய நண்பன் மனேகர். நீண்ட நாட்களுக்கு பிறகு ரெயில் நிலையத்தில் சந்தித்தேன். பையன் ராணுவ சேவையை முடித்துக் கொண்டு ஊர் திரும்பிக் கொண்டிருக்கிருன். நம்ம வீட்டில் இரண்டு நாள் தங்கிவிட்டுபோகட்டும் என்றுஅழைத்து வந்தேன்!'

அவள் கைகளைக் கூப்பி எனக்கு வணக்கம் சொன்னுள். நானும் பதிலுக்கு வணக்கம் கூறினேன்.

அவ்வளவுதான். அதற்கு மேல் என்னிடம் ஒரு வார்த்தை கூட பேச வில்லை. கடந்த இரண்டு நாட்களாக அந்த வீட்டில் நானும் ஒரு உறுப்பினனுக உலாவினேன் நானும் அவளும் பேசியதே இல்லை. அவ்வளவு பண்புள்ள பெண்.

அவள் திருமணம் செய்துகொள்ள மறுக்கிருள் என்றும் காரணம்கேட்டால் குமுறிக் குமுறி அழுகிருள் என்றும் அவளுக்குத் திருமணம் ஆகிறவரை தானும் திருமணம் செய்துகொள்வது இல்லை என்று சபதம் பூண்டு இருப்பதாகவும் என் நண்பன் கூறியபோது எனக்கு பெரும் அதிர்ச்சியாக இருந்தது

அவள் ஏன் திருமணம் செய்து கொள்ள மறுக்கிருள்? அவளைப் பார்க்கிற பொழுதெல்லாம் என்னை இந்தக் கேள்வி குடைந்தது.

கல்லூரியில் அவள் படித்திருந்தும் ரொம்பவும் கட்டுப்பெட்டியாக இருந்தாள். நாங்கள் மூன்று பேர்களும் உட்கார்ந்து பேசுகிற பொழுதுகூட அவள் ஒன்றும் பேசுவது இல்லை. அவளது சமையலை நான்பாராட்டும்போது அவள் பூரித்தது கிடையாது. ஏதோ இயந்திர கதியில் இயங்கிக்கொண்டிருந்ததையும், அவள் மனதின் அடித்தளத்தில் ஏதோ புதிர் முகாமிட்டிருப்பதையும் என்னல் கண்டுகொள்ள முடிந்தது

ஆனல் அவளது அண்ணனலேயே கண்டுகொள்ளமுடியாதபுதிரைஎன்னைப் போல் அன்னியனை ஒருவனல் இரண்டு நாள் பழக்கத்தில் எப்படி கண்டுபிடித்துவிட முடியும்?

நான் புறப்படத் தயாராகிக் கொண்டிருந்தேன். வெளியே போன பாலு இன்னும் திரும்பி வரவில்லை தொழில் விஷயமாக ஒரு பிரமுகரைக் காணச் சென்ற அவன் மாலை ஐந்து மணிக்கு திரும்புவதாகச் சொன்னன்.

நான் பாலுவுக்கும் அவன் தங்கை சீதாவுக்கும் சில பரிசுப் பொருட்கள் வாங்க வெளியே போய்விட்டுவந்தேன்.

பாலு இன்னும் திரும்பாததால் எனக்கு வீட்டில் இருப்புக் கொள்ள வில்லை. காரணம் வீட்டில் சீதா மட்டும் தனித்து இருப்பதுதான். பாலு வரும் வரை வெளியே போய்விட்டு வரலாம் என்று நான் எண்ணுகையில் எதிர் பாராதவிதமாக சீதா என்முன் வந்தாள்.

"அண்ணு வந்து விடுவான். அதற் குள் இந்த காப்பியை சாப்பிடுங்கள்!"

அவள் டீப்பாயில்வைத்த காப்பியை எடுத்து உறிஞ்ச ஆரம்பித்தேன்.

நான் எதிர்பார்த்ததற்குமாருக,சீதா என் எதிரிலேயே நின்றுகொண்டிருந்த துடன் என் வலது கையை உற்றுப் பார்ப்பதைக் கவனித்தேன்.

எனக்கு வலது கை பெருவிரலில் அதிகமாக இருக்கும் அசிங்கமான அந்த ஆருவது விரலைத்தான் அவள் உற்றுப் பார்க்கிருள் என்று தெரிந்ததும் நான் அவமானத்தால் குறுகினேன்.

எனக்கு சிறுவயதிலிந்தே அவமானத்தையும் 'ஆறு விரலான்' என்ற பட்டப் பெயரையும் கொடுத்த அந்த அவமான சின்னத்தைத்தான் சீதாவும் உற்று உற்று பார்த்து மனதுக் குள் நகைக்கிருள் என்று நினைத்து நான் மனம் குமைந்தேன்.

எனக்கு அந்த 'எக்ஸ்ட்ரா'விரலைத் தந்த பிரும்மாவை மனத்துக்குள் பழித்தேன்.

காலிக் கோப்பையை அவள் எடுத்துச்சென்றதும் எனக்கு'அப்பாடா' என்று நிம்மதி ஏற்பட்டது

ஆனல் சில நிமிடங்களில் மீண்டும் என் முன் தோன்றினுள்.

அவள் கையில் 'இஸ்திரி' போடப் பட்ட துணிகள் இருந்தன

அடடே! என் உடைகளை துவைத்து. உலர்த்தி 'பெட்டி'யும் போட்டு கொடுக்கிருளே!

துணிகளை என் முன்னல் வைத்த அவள் "சார், இந்த துணிகளில் 'ஆர் எம்.' என்று சலவைக் குறி உள்ளதே எல்லாய் உங்களதுதானே?" என்ருள்.

"ஆமாம்!" என்பதற்கு அடை யாளமாக நான் தலையை ஆட்டினேன்.

பிறகு அவள், ஒரு நைந்த கைக் குட்டையை என் முன் வைத்து, "இதிலும் 'ஆர். எம்' என்றுதான் போட்டுள்ளது. இது கடந்த பதினெரு வருடமாக என்னிடம் உள்ளது. இதுவும் உங்களது தானே" அவள் குரலில் கடுமை தெரித்தது.

திடுக்கிட்ட நான் பதில் சொல்ல முடியாமல், அந்த கைக்குட்டையையே பார்த்த வண்ணம் சிந்தனையில் ஆழ்ந்தேன்

என் ஆருவது விரலையும், கைக் குட்டையையும் மாறி மாறி பார்த்தவாறு அவள் என்னை மிரட்டினுள்.

"மிஸ்டர், மனேகர்!... என்னை உங்களுக்கு நினைவிருக்கிறதா?

நான் பதில் சொல்லவில்லை.

"உம் ...... பதில் சொல்லுங்கள்" அனலைக் கக்கினுள்!

நான் பிடித்து வைத்த பிள்ளையார் போல் கல்லாய் சமைந்திருந்தேன்.

எண்ணச் சுழலில் என்ரே நிகழ்த்திய இளமை வெறியாட்டம் வட் டமிட்டது.

மறுகணம் 'பளீர்' என்று என் கன்னத்தில் விழுந்த அறையால் பொறி கலங்கினேன்.

எதிர்பாராத அவளது திடீர் தாக்கு தலுக்குள்ளான நான் சமாளிக்க சில நிமிடங்களாயின.

ஆம்! அறைந்தது சீதாதான்!

அவள் வெறிகொண்டு கத்தினுள். "பதினெரு ஆண்டுகளுக்கு முன்னல், வனப்பு மிக்க ஒரு மாணவி. அகில இந்திய விளையாட்டுப் போட்டிகளில் கலந்துகொள்ள நாகபுரி போயிருந்தாள்

ஒரு விடுதியில் அவளுக்கென்றுஒதுக்கப் பட்ட அறையில் தனிமையில் ஓய்வாக படுத்திருந்தாள்.

திடீரென்று மின்விளக்குகள் யாவும் அணைந்து எங்கும் கரியஇருள் படிந்தது அதனை பயன்படுத்தி அந்த அறையின் உள் நுழைந்த ஒரு உருவம் மறுகணம் கதவைத் தாளிட்டது. நிழற்படம் போல் அதனை கண்டுகொண்ட மாணவி "ஓ" வென்று கத்துவதற்கு முன்னால் அந்த உருவம் அவள் மீது பாய்ந்து வாயை பொத்தி, அவளை செயல் இழக்கச் செய்தது. அவள் திமிறினாள். தன் பெண்மையைக் காப்பாற்றிக் கொள்ள வலிமை முழுவதையும் காட்டி போரா டினாள். ஆனால் வெற்றி அவனுக்குத் தான். அவள் கற்பை சூறையாடிவிட்ட அந்த பயங்கர மிருகம் இருட்டிலேயே ஓடி ஒளிந்தது.

சற்று நேரத்தில் மின் விளக்குகள் ஒளி சிந்தின! இடைப்பட்ட இருளில் அவளின் அலங்கோலத்தை அங்கைக் கனியாய் உணர்த்தின ஒளி விளக்குகள் அவன் யார்? எப்படி இருப்பான்? என காண முடியாதபடி அந்த கொள்ளை நடந்து முடிந்துவிட்டது. உடல் நடுங்க நடந்தவற்றை நினைவுபடுத்துகிறாள். ....

அவள் முகத்தோடு விளையாடிய போது அவன் கையை கடித்தாள். அப் போதுதான் தெரிந்தது அவனுக்கு ஒரு கையில் ஆறு விரல்களென்று. அவன் அவளுக்கு விட்டுச் சென்றிருந்த ஒரே நினைவுச் சின்னம் ஒரு கைக்குட்டை அதில் 'ஆர். எம்.' என்ற சலவைக்குறி.

மறுநாள் அவள் தமிழ்நாடு திரும் பினாள் விளையாட்டில் வெற்றி பெற்ற வெள்ளிக்கோப்பைகளுடன். வீராங்கனை என்ற பாராட்டுரைகள் அவளுக்கு!

அவளோ அழுதாள்! அழுதாள்! அழுதுகொண்டே இருக்கிறாள் இந்த பதினொரு ஆண்டுகளாய்! தன் உள்ளக் குமுறல்களை உடன்பிறப்பிடம் கூட காட்டிக்கொள்ள முடியாதபடி காலமெல் லாம் அழுது கரைந்தாள். அவள் யார்?

இதோ இந்த சீதாதான்!

கல்லூரி மாணவியாய் விளையாட்டு வீராங்கனையாய் தனியறையில் தங்கிய என்னை காரிருளில் வஞ்சித்து, ஒரு பெண் தன் வாழ்நாளில் எதைப் பேணி பாதுகாக்கவேண்டுமோ அந்த கற்பை கறைப்படுத்தி, நிறைவை குறைவாக்கி. எச்சில்பிண்டமாய் நடைப்பிணமாக்கி, புரியாத புதிராக தவிக்கவிட்ட மிருகம் யார் தெரிகிறதா?

மிஸ்டர் மனேஜர் . நீங்கள் தான்! நீங்களே தான்! இதோ இந்த ஆறு விரல்! இதோ இந்த கைக்குட்டை! இவைகளே சாட்சி"

எரிமலை வெடித்து ஓய்ந்தது! அதன் அனலில் புழுவெனத் துடித்து கண்ணீர் உகுத்த என்னை, பாலுவின் காலடியோசை திடுக்கிடச்செய்தது.

எதிர்பார்த்ததுபோல் இடி முழக்கத் துடன் அவன் கூவினான் ...

'மனேஜர்! மை டியர் பிரண்ட்! என் தங்கை கூறியதை யாவும் நான் கேட்டுக்கொண்டிருந்தேன். இதெல்லாம் உண்மைதானா? ... என் தங்கையை மாசுபடுத்தி அவள் வாழ்வைக் குலைத்த பாதகன் நீதானா சொல்லடா சொல்'

உடலெங்கும் வியர்க்க, கண்களில் நீர் மல்க, துக்கம் தொண்டையை அடைக்க, எதுவும் பேச இயலாது பாவ மன்னிப்பைக் கோரும் பாவியாய் நின்றேன். என் குற்றத்தை ஒப்புக் கொள்ளும் வகையில் என் கரங்கள் அந்த நைந்த கைக்குட்டையை எடுத்து கண்ணீரை துடைத்தன.

சீதாவின் கேவலும் அழுகையும் இன்னும் நிற்கவில்லை.

"சீதா என்னை மன்னித்துவிடு. படித்துக் கொண்டிருந்தபோது விளையாட்டு வீரனாக நானும் நாகபுரி வந்திருந்தேன். தெரியாத பருவத்தில் புரியாமல் செய்துவிட்ட அந்த பாவச் செயலுக்கு நான் வருந்தாத நாளே கிடையாது. என்னை நம்பு. உன்னை ஏற்றுக் கொள்ள தயாராக இருக்கிறேன்.

சீதா அழுது கொண்டே உள்புற மாக ஓடிவிட்டாள்.

பாலு என் அருகில் அமர்ந்து கொண்டு, "மனோகர்! கன்னம் வலிக் கிறதா? என் தங்கை உன்னை என்ன மாய் அறைந்து விட்டாள்!" என்று கிண்டல் செய்தான்.

சற்று நேர மவுனத்துக்குப் பிறகு நான் சொன்னேன், 'பாலு உடனே என் பெற்றோருக்கு டிரங்கால் போட்டு வரவழை. அவர்கள் மருமகளை பார்த்து விட்டு, திருமணத்துக்கு நாள் குறிக்கட்டும்" என்றேன்.

"சரிடா" என்றான்

"என்னை 'டா' என்று சொல்லாதே இனிமேல் மரியாதையாகப் பேசு. ஏனென்றால் இனி நான் உனது அத்தான்."

"சரியத்தான்" என்று குழைந்து கொண்டே அவன் ஓடினான், போஸ்ட் ஆபீசில் போய் டிரங்கால் போட.

என் கால்களில் தாமரை மலர் களின் ஸ்பரிசம் ஏற்பட்டது. கீழே பார்த்தேன். என் கால்மாட்டில் விழுந்து சீதா குமுறிக் குமுறி அழுவதை பார்த்து துணுக்குற்றேன்.

அவளை தூக்கி நிறுத்தி 'சீதா அழாதே. நீ இதுவரை அழுதது போதும்" என்றேன்.

அவள் "என்னை மன்னித்து விடுங்கள்" என்றாள்.

பிறகு வென்னீர் கொண்டு வந்து ஒத்தடம் கொடுத்தாள், "கும்" என்று வீங்கி இருந்த என் கன்னத்துக்கு!

---

# ஒரு பிரச்சினையின் காணிக்கை

ப. குமாரசுவாமி,
மூன்ளும் ஆண்டு

"உன் பாதங்கள் எவ்வளவு இனிமையாக இருக்கின்றன. அவைகளை பூமியில் பதிய விடாதே"

— என் பிரச்சினையின் தொடக்கத்திற்கு அடிப்படையான இந்த என் வாசகங்கள் சம்பந்தமில்லாத ஒற்றுமையின் காணிக்கை தான். ஆனால் பின் வருவன —

... அப்படி பதிய நடக்கும் உன் மென்மையான நடைக்கு உவமைதான் உண்டோ? திச்சயம் உனக்கு உவமை நீயே! தவருக நினைக்காதே. அது தானே உண்மையுங் கூட!

நடையோடு நீ சுமக்கும் பழியையும் நான் காணத் தவறவில்லை. அந்த நேசமான பழியினைத் தாங்காது நீ புலம்பும் புலம்பலும் என் செவியில் விழுந்து கொண்டுதான் இருக்கின்றன.

அச்சிறு புலம்பலால் எத்தனை பேருக்கு எத்தனை நன்மையை ஏற்படுத்தியிருக்கிருய்? எத்தனை பேருக்கு எத்தனை தீமையை ஏற்படுத்தியிருக்கிருய் என்பதையும் நான் சாதாரணமாகத் தெரிந்துவைத்துள்ளேன்.

நான் தனிமையில் நடந்து செல்லும்போது ஆற்ருேரத்திலும், குளக்கரையிலும், சிறுசுவற்றிலும் நீ படைத்த சரித்திரத்தை நினைவில் கொண்டுள்ளது எல்லோருக்கும் தெரிந்ததுதான்.

உனக்கு நீ யாருடனும் உவமையோ ஒற்றுமையோ காண இயலாது. ஆனல், உன்னல் பலரை பலருக்கு உவமையும் ஒற்றுமையும் கூறப்பட்டிருப்பது உனக்குத் தெரியாது தான். அதில் நகையும் உண்டு, சுவையும் உண்டு.

உன் நினைப்பும் எண்ணமும் எனக்குத் தெரியும். நீ எல்லோருக்கும் ஒரு பிரச்சினையாக இருப்பதால் தான் உன்னை நான் காணிக்கையாக வைக்க முயலுகிறேன். அதற்கு நீ தடை செய்ய மாட்டாய்.

உன் புன்சிரிப்பை நான் இதுவரை பார்த்ததாக நினைவில்லை. அப்படி உன் புன்னகையை நான் கண்டிருந்தாலும் அதனை அசாதாரணமாகவே ஏற்றுக் கொண்டேன் என்பதை மற்றவர்கள் அறியமாட்டார்கள்.

மற்றவர்களுக்கு நீ ஒரு பிரச்சினையாக இருக்கின்ருயோ, இல்லையோ ஆனல் எனக்கு இப்போழுது நீ ஒரு பிரச்சினை தான். அதற்காக உன்னை நீ தாழ்வாக நினைத்து வருந்தாதே.

உன் வாழ்க்கைப் படியின் ஒவ்வொரு நடவடிக்கையும் உன் தூய்மையான கடமையில்தான் முழுமை அடைகிறது என்பதையும், உன் கடமையை சற்றும் மனதில் நினையாமல் பலர் பல

விதமாக உன்னைப் பேசுவதும், விவரிப்பதும் கண்டு அவர்களுக்காக நான் வெட்கப்படுகிறேன்.

பொறுமைக்கும் ஓர் எல்லை உண்டோவென்றால்......... உண்டு என்பது உன் வாதமே! உன் விவேகம் எனக்கு, புரிகிறது. உன் கோபம் முழுமையும் அல்ல, கால் மட்டுமே.

என் பிரச்சனை என்ன என்று மற்றவர்கள் தெரிந்துகொள்ள மிகுந்த ஆவல் கொண்டுள்ளனர் என்பதும், அவர்களுக்கு உண்மையான மனக்குழப்பத்தை ஏற்படுத்திய நான் அதைத் துரிதமாக நீக்க விரைவதும் நீ உணர்ந்திருப்பாய் எனவே உன்னை—என் பிரச்சினையான உன்னை—அன்பர்களுக்கும், நண்பர்களுக்கும் இம்மலரின் 62 வது பக்கத்தில் அறிமுகப்படுத்திக் கொள்வது பொருத்தமாக இருக்கும் என எண்ணி, முக மலர்கிறேன்! அக மகிழ்கிறேன்!!

—

# ஆண்டு பலவாக நரையில வாகுதல்......

சோம. பூபதிராசு, முதலாம் ஆண்டு B. I. M.

புறநானூற்றில் காணப்படும் புலவர்கள் வரிசையில் சிறப்பிற்குரியவர்களில் ஒருவர் பிசிராந்தையார். இவர் கோப்பெரும் சோழன் என்ற மன்னனிடத்தில் கொண்டிருந்த நட்பு நட்புலகத்திற்கே ஒரு பெரிய எடுத்துக்காட்டு. இன்றைக்கும் நட்பிற் சிறந்தவரை "நட்பிற்கோர் பிசிராந்தை" என சிறப்பிக்கக் காண்கின்றோம் புறநானூற்றில் இவர் பாடியுள்ளதாகக் காணப்படுகின்ற பாடல்கள் மூன்று. அவற்றில் ஒன்று கோப்பெருஞ்சோழனின் அன்பை வியந்து பாடியது பாண்டியன் அறிவுடைநம்பிக்கு அறிவுரை கூறிப் பாடியது மற்றொன்று. தமக்கு வயது முதிர்ந்தும் ஏன் நரை ஏற்படவில்லை என்பதை விளக்கிப் பாடியது ஒன்று.

பாண்டிய நாட்டைச் சார்ந்த பிசிர் என்ற தம்மூரிலிருந்து சோழமன்னனும் தனது நண்பனுமான கோப்பெருஞ் சோழனைக் காண சோழ நாட்டிற்குச் சென்றார் பிசிராந்தையார். சோழநாட்டை அடைந்தபோது தனது நண்பன் வடக்கிருந்து உயிர் விட்ட செய்தி அவருக்காகக் காத்திருந்தது. கலங்கிய உள்ளத்தோடு தனது நண்பனிருந்த இடத்திலுள்ள நடுகல்லைக் கண்டு கண்ணீர் சிந்தினார். துன்பத்திலிருந்து தெளிந்தபின், அருகே இருந்தவர்களோடு தமது நண்பரின் அருமை பெருமைகளைப் பற்றி அளவளாவிக் கொண்டிருந்தார்.

பேசிக்கொண்டிருந்தோர் சிலர் உரையாடிக் கொண்டிருக்கும் போதே பிசிராந்தையாரின் கருமையான கூந்தலை, நரைக்கு இலக்காகாத அதன் பொலிவைக் காணத் தயங்கவில்லை.

இளமையிலேயே எத்தனையோ பேர் நரை அடைந்திட இந்த முதியவர் முடி இன்னும் நரைக்காமலிருக்கிறதே! அது எப்படி? ஒருவேளை நரை தெரியாமல் மை அடித்திருப்பாரோ? அல்லது காயகற்பம் என்னும் மருந்து கொண்டிருப்பாரோ என்றெல்லாம் கற்பனைகள் பல தோன்றி மறைந்தன. சரி அப்படி ஒரு மருந்திருந்தால் நாமும் நமது நரையைப் போக்கிக் கொள்ளலாமே என்ற ஆர்வமுற்ற பலர் திடீரென்று தாங்கள் எண்ணியதைப் புலவரிடத்திலேயே நேரடியாகவேக் கேட்டுவிட்டனர்.

வினா விடுக்கப்பட்டதோ புலவருக்கு! விடை சொல்லாமல் இருக்கமுடியுமா? விடையும் கிடைத்தது வியப்பான விடை இதோ,

"யாண்டுபல ஆக நரையில வாகுதல்
*யாங்கா இயரென வினவுதிர் ஆயின்*
*மாண்டஎன் மனைவியொடு மக்களும் [நிரம்பினர்*
*யான்கண் டனையரென் இளையரும்வேந்தனும்*
*அல்லவை செய்யான் காக்கும் அதன்தலை*
*ஆன்றவிந் தடங்கிய கொள்கைச்*
*சான்றோர் பலர் யான் வாழும் ஊரே"*

[புறம் — 191]

"வயது முதிர்ந்தும் நரை ஏற்படாமைக்குக் காரணம் என்ன தெரியுமா? என் கவலையற்ற வாழ்க்கைதான். எனது மனைவி நல்ல பண்பினள்.

எனது மக்கள் அறிவுடையோர். எனது பணியாட்கள் எனது கருத்துக்கேற்ப செயல்படுகிறவர்கள். எனது அரசன் அறம் பிறழாமல் எம்மைக் காப்பவன். மேலும் நல்ல கொள்கைகளையுடைய சான்றோர் பலர் எம் ஊரில் வாழ்கின்றனர் ''

புலவர் சொன்ன மொழி பொய் யல்ல. கவலையினால் முடி நரைக்கிறது என்பது இதுவரை ஒரு நம்பிக்கை யாகத்தான் இருந்து வந்தது. ஆனால் அறிவியல் ஆய்வுகள் இப்போது அந்த நம்பிக்கையை உறுதிப்படுத்திவிட்டன. அதோடு மட்டுமல்லாமல் நரையைப் பற்றிய இன்னும் அனேக உண்மை களும் தெளிவுபடுத்தப்பட்டிருக்கின்றன.

பெரும்பாலானவர்களுக்கு முதுமையில் நரை தோன்றுவது இயல்பு. ஆனால் சிலருக்கு இளம் வயதிலேயோ நடு வயதிலேயோ ஆச்சரியத்தையும் அதோடு கொஞ்சம் ஆயாசத்தையும் ஏற்படுத்துகின்றதாக நரை தோன்று வதுண்டு.

இயற்கையான நரை தோன்று வதற்கு வெகுகாலத்திற்கு முன்பே கவலை, அதிர்ச்சி போன்றவற்றால் நரை தோன்ற முடியும்.

மேரி அன்டாயினெட்டின் (Marie Antoinett's) முடியானது அவள் கில்லட்டின் கருவியில் வெட்டப்பட இருந்த நாளிற்கு முந்திய நாளில் ஒரே இரவில் நரைத்துவிட்டதாம்.

இதேபோல் கொல்லப்படுவதற்கு முதல்நாளில் சர். தாமசு மோர் (Thomos More) முடியும் நரைத்து விட்டதாம். குண்டுவீச்சு நடைபெற்ற காலங்களில் அச்சத்தினாலும் பரபரப்பினாலும் வீரர்கள் பலருக்கு நரை தோன்றிவிட்டதாம்.

முடிகளில் தோன்றும் முரண்பட்ட வண்ணங்கள் போன்ற மாறுபாடுகள் அறிவியல் அறிஞர்களுக்கேக்கூடச் சில வேளை புரியாதப் புதிராகத் திகழ்ந்திருக் கின்றன.

ஒருவனுடைய தலைமுடியும் தாடி யும் விரைவில் வெளுத்துப்போய்விடக் கூடும். நரைத்த முடி மீண்டும் கருமை அடையும் 30 ஆண்டுகால வாழ்க்கை யில் வண்ண மாறுபாடுகள் மூன்று முறை நிகழ்கின்றன. ஒவ்வொரு முறை யும் நரைப்பதென்பது மிக விரைவாக நடைபெறுகின்றது. ஆனால் அதே முடி மறுபடியும் கருமை அடைய 5 ஆண்டுகள் ஆகின்றன.

சிலவேளைகளில் மனக் குழப்பங்கள் நரையை ஏற்படுத்துகின்றன. மனம் அமைதி அடையும்போது நரை மாறி மீண்டும் கருமை ஏற்படுகிறது.

பொதுவாக, முதுமையின் விளை வாக முதலில் பழுப்பு நிறம் தோன்றி அதன்பின் வெளுப்படைகிறது. அப் போது வண்மை, அல்லது திண்மை அடைகிறது. நல்ல கருமையான முடியைவிட பழுப்பு நிறமான முடி தாமதமாக நரைப்பதாகச் சிலர் கருது கிறார்கள். ஆனால் இது வெறும் மயக்கமே அன்றி உண்மையல்ல. ஏனெனில் பழுப்பு நிறமான முடியினை உடையவர்களில் இந்த நிற மாறுபாட் டினை அவ்வளவு தெளிவாக அறிய முடியாதல்லவா?

பொதுவாக அடிக்கடி நோய்களுக்கு இலக்காதல், கேடயச்சுரப்பிக் (Thyorid) கோளாறுகள், மூளையடிச் சுரப்பி (Pituitary) பாதிக்கப்படுதல், தலையி னுடைய தோலில் ஏற்படும் கோளாறு கள்—இவையே முதுமைக்கு முன்பே

நரை தோன்றுவதற்கானக் காரணங்களாக அமைகின்றன.

**மருத்துவம்**

1. கவலைகளுக்கு மனதில் இடம் தரக்கூடாது!

2 முடி நரைத்தாலும் அதைப் பற்றிக் கவலைப்படாமல் அதற்கான மருத்துவமான கற்ப மருந்துகளை முறைப்படி உண்டுவர வேண்டும். நரையைப் பற்றியேக் கவலைப்பட்டுக் கொண்டிருந்தால் அந்தக் கவலையே பெருங்கவலையாகி நரையாமலிருக்கிற மற்ற முடிகளும் நரைத்து விடலாமல்லவா?!

3. நரை, திரை, மூப்பு ஏற்படாமலிருக்க சித்தர்கள் எண்ணிறந்த கற்பங்களைத் தங்களுடைய நூலில் குறிப்பிட்டுள்ளனர். அவற்றினை முறைப்படி உண்டு வரவேண்டும்.

தேரன் என்ற மருத்துவ அறிஞன், "நான் வயது முதிர்ந்தவனாக இருந்தாலும் இன்னும் வலிவோடும் பொலிவோடும் திகழ்வதன் இரகசியம் என்னவென்று தெரியுமா? இஞ்சி, தேன் நெய், மா ஆகியவற்றைக் கற்பமாக உண்டு வருகிறேன் நீங்களும் நீடுவாழ வேண்டும் என்று ஆசைப்பட்டால் இவ்வாறே உண்டு வாருங்கள்" என்கிறான்.

*"இருந்தேன் அலங்காரம் மெய்தயின்று மீறி*
*இருந்தேன் அலங்காரம் எய்தி—இருந்தேன்*
*நீவி ரகசயமா நென்மா வுடன் கலந்து*
*நீவி ரகசயமா நெய்"*

*(தேரன் யமக வெண்பா)*

மேலும் "உங்கள் மூக்கிலேயுள்ள மயிர்கூட நரைத்துவிட்டதா? வெட்டப் படுவதற்காகப் பலிபீடத்தை நோக்கி இழுத்துச் செல்லப்படுகின்ற ஆடானது அச்சத்தினால் தள்ளாடுவதுபோல முதுமைச் சோர்வினால் தள்ளாடுகிறீர்களா? இதற்காக கவலைப்பட்டுக் கொண்டிருப்பானேன்! எலுமிச்சம் பழத்தை ஆறு மாதங்கள் கற்ப முறைப்படி உண்டு வாருங்கள். உங்களுடைய உடலும் நிறைமதியைப் போன்ற பொலிவினைப் பெறும். ஐயப்பாட்டிற்கு இடமளிக்க வேண்டாம். விரைந்து உண்க" என்கிறார்.

*"கோணத்(து) உளையுங் குறியுளையுங் கொக்காகில்*
*கோணத்(து) உளையுங் குருளைபோற் —கோணச்*
*சடமதியுண் மாறுமற் சம்பீரக் கற்பஞ்*
*சடமதியுண் மாறுமற் சண்"*

*(தேரன் யமக வெண்பா)*

தெய்வத் திருமூலரும் தனது திருமந்திரத்தில் "அமுரிதாரணை" விளக்கம் தருகின்ற நிலையில் நரை மாறுவதற்காகப் பின் கண்ட முறையைப் பயன்படுத்துமாறு குறிப்பிடுகிறார். அமுரியில் மிளகு, நெல்லி, மஞ்சள், வேம்பு ஆகியவற்றைத் தக்க அளவு கலந்து முறைப்படி உண்டு வந்தால் நரை மாறி இருளைப்போன்று கூந்தல் இருக்கும் என்கிறார்.

*"அளக நன்னுதல் ஆயோ ரதிசயம்*
*களவு காயம் கலந்தஇந் நீரிலே*
*மிளகு நெல்லியும் மஞ்சளும் வேம்பிடில்*
*இளகும் மேனி இருளும் கபாலமே"*

*(திருமந்திரம் — 829)*

இவ்வாறு ஏட்டளவில் அமைந்திருக்கிற கருத்துக்களையெல்லாம் நடைமுறை ஆய்வுகள் மூலம் தெளிவுபடுத்தினால் நமது கூந்தலையும் நரைக்காமல் பேணிக்கொள்ளலாமல்லவா?

———



# தேன்

வ. மீனுட்சிசுந்தரவல்லி
பயிற்சி மருத்துவர்.

உலகத்திலே செல்வம் நிலையான தல்ல என்பதைக் குறிக்க திருமூலர் தேனீயை உதாரணமாகக் காட்டுகிருர். எப்படியெனில் தினமும் அணுஅணு வாகப் பாடுபட்டுத் தேன்கூட்டைக் கட்டி தேனைச் சேகரிக்கிறது. அந்தத் தேனீயை விரட்டிவிட்டுத் தேனை எடுத்துக்கொள்கிருன் மனிதன். அதுபோல மனிதா, உனது செல்வத்தையும் ஒரு நாளில் பாதகர் எடுத்துச் சென்று விடுவாரென்று கூறுகிருர்.

"ஈட்டிய தேன் பூ மணம் கண்டிரதமும்
கூட்டிக் கொணர்ந்தொரு கொம்பிடை
வைத்திடும்
ஒட்டித் துரந்திட்டது வலியார் கொளக்
காட்டிக் கொடுத்தது கைவிட்டவாறே"
(திருமூலர்)

அன்றியும் பூதத்தாழ்வார் திருவேங்கட மலையைப்பற்றி கூறுகின்ற காலத்து அந்த மலையில் யானைகளும், மூங்கிற் காடும், தேனடைகளும் நிறைந்துள்ளன. அங்கு ஆண்யானை இள மூங்கிலைப் பறித்து அதன் கூட்டிலுள்ள தேனை பெண் யானைக்குக் கொடுப்பதாக கூறினர்.

இவ்வாறு அரும்பாடுபட்டு கட்டப் பட்ட தேன்கூட்டை ஒரே நொடியில் கலைத்து அதிலிருந்து பெறும் தேனை நினைத்தாலே நாக்கிலே நீர் ஊறத்தான் செய்யும். இத்தகைய தேனை ஆதிகாலத்திலிருந்தே உபயோகித்து வந்தார்களென்பதற்குப் பல சான்றுகள் கிடைத்துள்ளன.

தேவர்கள் முதல் ரிஷிகள் வரை தேனல் செய்யப்பட்ட இனியபானத்தை உபயோகித்துவந்தனரென்று ரிக்வேதத்திலிருந்து அறியப்படுகிறது.

வாலன்சியா (Valancia) விலுள்ள குவாஸ்டிலாஅரான (Spider Cave) என்ற குகை சிற்பத்தில் ஒரு கயிறு மூலம் ஏறி தேனடையிலிருந்து தேன் எடுப்பது போன்றும், சினம் கொண்ட தேனீக்கள் அவனைச் சூழ்ந்து கொட்டுவதுபோன்றும் ஓவியம் உள்ளது.

பால்கான் நாட்டு பழங்குடி மக்கள் டியூட்டானியர்கள் மணமான புதுத் தம்பதிகளுக்கு தேனை உணவாகப் படைக்கும்பழக்கத்தை மேற்கொண்டிருந்தார்கள்.

டெமோரிகிடிஸ் என்ற கிரேக்க ஞானி தேனை வெந்நீரில் விட்டு அதிலிருந்து வரும் ஆவியை உண்டு பல நாட்கள் உயிர் வாழ்ந்ததாகக் கூறப் படுகின்றது.

சர்க்கரை வருவதற்கு முன்பு வரை உரோமர், எகிப்தியர், கிரேக்கர் தேனை உபயோகித்து வந்தனர்.

புதுமணத் தம்பதிகளுக்கு பாலும் பழமும் தேனும் கலந்து தருவதை வழக்கில் காண்கிறோம்.

அன்றியும் ஸ்பார்ட்டா நகரத்தில் புது மணமகளை மாமியார் நாக்கிலே தேனைத் தடவி அழைக்கும் வழக்கம் உள்ளதாம்.

தமிழ்த் தெய்வமாம் முருகனுக்கு தேன் கலந்த பஞ்சாமிருதத்தைப் படைத்து அருந்தி வருவதைக் காண்கிறோம்.

தேனிலிருந்து பீர் அல்லது ஒயினைத் தயாரித்து ஆப்பிரிக்கா நாட்டின் சுதேசிகள் உபயோகித்து வந்தனர்.

ஏழை மக்களும் வேடுவர்களும் தேனையும், தினைமாவையும் கலந்து அருந்துவதைக் காண்கிறோம்.

வண்ண வண்ணமாகப் பூத்துக் குலுங்கும் மலர்களிலிருந்து உண்டாகும் ஓர்வித அமிலத்தை தேன்வண்டுகள் உறிந்து சேமிக்கிறது. அது என்சைமால் மாற்றமடைந்து தேனாக உமிழ்கிறது. அந்தத் தேன் தனக்குக் குளிர்காலத்தில் பயன்படும் என்பதற்காகத் தேனீக்கள் தேன்கூட்டில் சேமித்து வைக்கின்றன

எந்த வகைப் பூக்களிலிருந்து சேகரிக்கப்படுகின்றதோ அதற்கும் காலத்திற்கும் தக்கவாறுதேனின் மணம், உருசி, குணம், நிறம் மாறுபடும். உதாரணமாக வேப்பம்பூ பூத்துக் குலுங்கும் காலத்தில் தேனீக்கள் வேம்பூவிலிருந்து தேனை சேகரிக்கும். அப்படி சேகரிக்கப் பட்ட தேன் அந்த வேம்பின் மணமும், குணமும் பெற்றிருக்கும்.

மைசூர், கூர்க், பெல்காம், தார்வார், கொல்லிமலை, அஞ்சட்டி,சத்தியமங்கலம் காடுகள், கேரளாவில் பல காடுகளில் சந்தனத்தேன் காணப்படுகிறது. மாம் பழத்தேன், யூக்லிப்டஸ் தேன், புளியம் பழத் தேன், சீக்காய்த் தேன், காப்பி தேன், எள்ளு, கடுகு, சிங்கோனா என்று பலவிதமான தேன் வகைகள் உற்பத்தி செய்யப்பட்டு வருகின்றன ஆஸ்திரேலியாவில் யூக்லிப்டஸ் தேனும், கலிபோர்னியாவில் ஆரஞ்சுத் தேனும் உற்பத்தி செய்யப்படுகின்றன.

இத்தகைய தேனானது மலைத்தேன் கொம்புத் தேன், மரப்பொந்துத் தேன் புற்றுத்தேன், மனைத் தேன் என ஐந்து வகைப்படும். தேன் ஏழுவகை நிறங்களுடையது. தேன்கூட்டிலிருந்து ஒழுகும் தேனே மிகவும் சிறந்தது. புதிய தேன் இனிப்பாகவும், தெளிவாகவும், இளமஞ்சள் நிறமாகவும் இருக்கும் பின் உறைந்து மங்கலாகிவிடும். மேலும் புதுத் தேனால் நீண்ட ஆயுளும், உடல் வெப்பமும் ஒளியும் உண்டாகும்

தேனில் நீரும் 80 விழுக்காடு சர்க்கரையும் உள்ளது. அதில் 34 விழுக்காடு குளுகோசும், 40 விழுக்காடு பழச்சர்க்கரையும், 2 விழுக்காடு கரும்புச் சர்க்கரையும் உள்ளது. மேலும் தேனில் சுண்ணாம்புச்சத்து, இரும்பு,மக்னீசியம்,

---

54-வது பக்கத்தின் ஒரு பிரச்சினையின் காணிக்கையாகிய நபர் நான்தான்?

—"கழுதை"

பொட்டாசியம், பாஸ்பரஸ், கந்தகம், குளோரின் முதலியவை குறைந்த விழுக்காடே உள்ளது. வரண்ட பகுதியிலிருந்து சேகரிக்கப்படும் தேனில் நீரின் அளவு மிகவும் குறைவு.

தேன் ஒரு சிறந்த மலமிளக்கியாகவும் (Laxative), அழுகலகற்றியாகவும் (Antiseptic), கோழையகற்றியாகவும் (Expectorant), உடல் உரமாக்கி (Nutrient), பசித்தீ தூண்டியாகவும் (Stomachic), தூக்கமுண்டாக்கியாகவும் (Soporific) செயல்படுகிறது.

தேன் மிக எளிதில் 12 நாழிகையில் சீரணமாகி விடுகிறது. காரணம் தேனிலுள்ள குளுகோஸ் நேரடியாகவே இரத்தத்தில் கலந்து சக்தியைத் தரும். எனவே கிரேக்க நாட்டு ஒலிம்பிக் வீரர்கள் தேனை அருந்தி உடலை வலுவாக்கினர். மேலும் ஐரோப்பாக்கண்ட மக்கள் தேனை உணவுப் பொருளுடன் சேர்த்து அருந்தினர்.

ஒரு பவுண்டு தேன் 1500 கலோரி வெப்பத்தை தரும். எனவே விளையாட்டு வீரர்களும் ஆழ்கடலில்மூழ்கி முத்தெடுப்பவர்களும் தேனை உபயோகித்து சக்தியைப் பெறுகிறார்கள்.

தீப்பட்ட புண், வெந்நீரினால் ஏற்பட்ட புண், காயங்கள் இவைகளுக்குத் தேனைத் தடவினால் குணமாகும். தேனுக்கு நஞ்சுக் கிருமியைக் கொல்லும் (Anti septic) ஆற்றலுண்டு. இதற்கு ஈரத்தை இழுக்கும் சக்தியிருப்பதால கிருமிகள் கொல்லப்படுகின்றன. எகிப்தியர்களும் இறந்த சடலங்களை அழுகாமல் பாதுகாக்க தேனை உபயோகித்து வந்தனர்.

தேனைத் தொடர்ந்து அருந்தினால் கால்சியம், மக்னீசியம் அளவு அதிகப்படும் வயோதிகர்கள் தேனை அருந்தினால் அவர்களுக்கு கோழையை அகற்றி உடலுக்கு வெப்பத்தைத் தரும். எல்லாவித செரியாத் தன்மைகளுக்கும் இது சிறந்த மருத்து. குடற்பையின் காயங்களை விரைவில் ஆற்றும் தன்மையுண்டு.

தேன் மருந்துக்கு அனுமானமாகப் பயன்படுகிறது. தாமரைத் தேன் கண்ணோய்களில் பயன்படுகிறது. தொண்டைப்புண். இருமல், சளி, மலச்சிக்கல் போம்.

இதயத்திற்கு 'கிளைக்கோஜன்' என்ற சர்க்கரைப்பொருள் அதிகமாகத்தேவைப்படுகிறது. இதைத் தேன் கொடுத்து இதய பலவீனத்தைப் போக்கி இதய தசைகளுக்கு பலம் தருகிறது. இரத்தத்தின் கேடுகளைப் போக்கி அதிகப்படுத்தும். மேலும் கீல்வாயு நோயைப் போக்குகிறது. மூத்திரக் கோளங்கள், தோல் சம்பந்தமான பிணிகள், நுரையீரல் பிணிகள் முதலியவைப் போக்கப் படுகிறது.

இத்தகைய தித்திக்கும் தேனமுதை அருந்துபவர்கள் நரை, திரை, மூப்பு, பிணி, சாக்காடுஇவற்றைவென்று உடல் உரமும் நீண்ட ஆயுளையும் பெறுவார்கள் என்பது நிச்சயம்.

---

# ... பருவுடம்பில் சூக்கும நுண் கிருமிகள் ...

கே. சோமசேகரன், B. So. I B. I. M.

உடலுக்கு ஆதாரமாக உள்ள வாத, பித்த, கபம் ஆகிய முத்தோடங்கள், ஏழு உடல் தாதுக்கள், ஞானேந்திரியம், கன்மேந்திரியம், மனம், தசவாயுக்கள், தச நாடிகள் ஆகிய இவை யாவும் சேர்ந்து உருவாக்கப்பட்ட உடல் நன்னிலையில் இருப்பதற்கு சீவனுடன் அக்கினி சேர்ந்திருப்பதே ஆகும். இப்படிப்பட்ட சீவனைக் கொண்ட உடலைப் பெற்ற மனிதன் தனது வாழ்நாளில் தனது பழக்க வழக்கக் குற்றங்களினால் நோய்களுக்கு இலக்காகின்றான். நோய் பற்றப் படுவதற்குரிய ஒரு காரணம் தனது நோயில்லா நெறியினின்று தவறுவதே ஆகும். அசுத்தப் படுத்தப்பட்ட நீராலும், அசுத்தப் படுத்தப்பட்ட உணவாலும், சுகாதாரக் குறைவினாலும், நோய் மனிதனுக்குப் பரவுகிறது. கண்ணால்காணமுடியாத நுண்கிருமிகள் நீரின் வழியேயும், உணவின் வழியேயும், பூச்சி போன்ற பிராணிகளாலும் உடலினுள் செல்கிறது. நுண் கிருமிகளின் விஷநீரினாலும் அல்லது கிருமியுடை நீராலும் நோய் பரவுகின்றது என்று நம் முன்னோர்கள் உணர்ந்துள்ளனர் என்பதைக் கீழ்காணும் செய்யுளால் அறியலாம்.

''மட்டறவே கிருமி சென்று மருவும் போது
வகையதாய்க் கிருமியுடை விஷநீர் சென்று
குட்டமுடன் திரேகமெலாம் பரவும்போது
குழிக்குழியாய்க் கிருமியினிற் கொள்ளும் புள்ளி
தட்டறவே கிருமியுடை நீரால் வந்த
சகலகுட்டம் விஷ கரப்பான் சாற்றலாமே''

[குருநாடி செய் — 96]

கீழ்காணும் செய்யுளால் பல நோய்களுக்கும் கிருமிகளே காரணமென்றறியலாம்,

''கிருமியால் வந்த தோடம் பெருகவுண்டு
கேட்கிலதின் பிரிவதனைக் கிரமமாகப்
பொருமிவரும் வாயுவெல்லாங் கிருமியாலே
புழுக்கடிபோல் காணுமது கிருமியாலே
செருமிவரும் பவுத்திரங்கள் கிருமியாலே
தேகமதில் சொரிக் குட்டம் கிருமியாலே
துருமிவரும் சுரோணிதங் கிருமியாலே
சூட்சமுடன் கிரிகைப் பால் தொழில் செய்வீரே''

[குருநாடி — செய் 92]

ஜீவ ரக்ஷாமிருதத்தில் இருபதுவித பூச்சிகளைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. அவைகள் தோன்றி வசிக்கும் இட பேதங்களினால் நான்கு வகைப்படும்.

1. சரீரத்தின் மேல் இருப்பன
2. கபத்தில் இருப்பன
3. இரத்தத்தில் இருப்பன
4 மலத்தில் இருப்பன

மேற் கூறிய நான்கு வகைகளில் இங்கு இரண்டு வகைக் கிருமிகளின் தோற்றம், வளர்ச்சி, நோய் தோற்றுவிக்கும் விதம், வாழ்க்கைச் சுழற்சி ஆகியவைபற்றிக் காணலாம்.

## மலேரியாவைத் தோற்றுவிக்கும் கிருமியின் வாழ்க்கைச் சுழற்சி

மனிதரில் மலேரியாவைத் தோற்றுவிக்கும் முக்கியமான மூன்றுஒட்டுண்ணிகள் உண்டு அவை

1. Plasmodium vivax
2 Plasmotium maleriae
3 Plasmodium falci parum

மலேரியா ஒட்டுண்ணியின் வளர்ச்சியில் இரண்டு சுழற்சிகள் உண்டு. ஒன்று மனித உடலிலும் இரண்டாவது

சுழற்சி (Anopheles) என்ற இனத்தைச் சேர்ந்த கொசுவிலும் நடைபெறுகிறது மனிதரிலும், கொசுவிலும் நடைபெறும் சுழற்சியின் தன்மை மாறுபட்டது.

மனிதரில்பால் இல்லா இனப் பெருக்கத்தின் (Asexual Reproduction) மூலம் சுழற்சி நடைபெறுகிறது. கொசுவில் பால் இனப் பெருக்கம் (Sexual Reproduction) மூலம் நடைபெறுகிறது

மனிதனில் வாழும் ஒட்டுண்ணிகளில் இந்த மலேரியாநோயைத் தோற்றுவிக்கும் ஒட்டுண்ணி மாத்திரம் மனிதனை ஒரு இடை ஆதாரமாக (Intermediate host)கொண்டு வாழ்கிறது. கொசுவைத் தனது முழு ஆதாரமாகக் (Definite host) கொண்டுள்ளது.

**மனிதரில் முதல்கட்ட வாழ்க்கை சுழற்சி**

மலேரியா ஒட்டுண்ணிகள் தனது வாழ்க்கை சுழற்சியை இரண்டு நிலைகளில் நடத்துகின்றன.

1. ஈரல் விலங்கள் (Liver cells)
2. செவ்விலம் (Erythro cytes)

முதலில் ஈரல் விலங்களில் நடக்கும் சுழற்சியை முன் செவ்வில சுழற்சி அல்லது புறசெவ்வில சுழற்சி (Pre-erythro cytic Cycle or Exo Erythrocytic cycle) என்றும், செவ்விலங்களில் நடக்கும் சுழற்சியை செவ்வில சுழற்சி அல்லது அக செவ்வில சுழற்சி (Erythro cytic or Endo Erythro cytic Cycle) என்றும் அழைப்பர்.

**புற செவ்வில சுழற்சி:-** (ex) Erythro cytic Cycle)

அனேபிலின் (Anopheline) என்ற பெண்ணினக்கொசுவானது மனிதனைக் கடிக்கும் சமயத்தில், பருவம் அடையாத ஒட்டுண்ணிகளின் இன விருத்திக்குக் காரணமான ஜீவ அணுவை உடலினுள் செலுத்துகிறது. மனிதனின் உடலில் செலுத்தப்பட்ட ஜீவ அணுக்கள் (Sporozoites) மெல்லியதாகவும் அரிவாள் போன்ற வடிவத்திலும், மிகவும் வேகமாக நீந்தக்கூடிய தன்மை உள்ளனவாகவும் காணப்படும். இரத்த ஓட்டத்தில் சுமார் முப்பது நிமிடம் நீந்திய பின்னர் ஈரலின் ரெட்டிகுலா என்டோதிலியல் விலத்தை(Reticuloendothelial Cell) சென்றடைகின்றது. பின்னர் ஈரல் விலங்களை நிரப்பி விடுகின்றது. இந்த நிலைக்குப் பெயர் கிரிப்டோ சைசோன்ட் (Crypto-Schizont) ஒன்று பலவாக பாலில்லா இனப்பெருக்கத்தின் மூலம் விரிவடைந்து, முடிவில் கிரிட்டோ மீரோஸாய்ட் (Crypto - Merozoites) என்ற நிலையை அடைந்து, ஈரல் விலங்களைத் தகர்த்துக் கொண்டு இரத்தத்துடன் கலக்கிறது. பின்னர் இந்த நிலையில் செவ்விலங்களைத் தாக்குகின்றது இதிலிருந்துசெவ்விலச்சுழற்சி அல்லது அகசெவ்விலச் சுழற்சிதுவக்கம் ஆகும்.

முன்செவ்விலச்சுழற்சியின் நிலையை முட்டையை அடைகாக்கும் (Incubation) காலம் போன்று கருதப்படுகிறது முன் செவ்வில சுழற்சிக்காலத்தில் (7 முதல் 17 நாள் வரை) குருதி ஓட்டத்தில் மலேரியா ஒட்டுண்ணிகளைக் காண முடியாது.

**அக செவ்வில சுழற்சி :-**
(Erythrocytic or Endo Erythrocytic Cycle)

இச்சுழற்சியில், ஈரல் விலங்களிலிருந்து குருதிக்கு வந்த கிரிப்டோ - மிரோஸாய்ட் (Crypto-Merozoites) என்ற நிலையிலுள்ள மலேரியா ஒட்டுண்ணிகள் பால் இல்லா இனப்

பெருக்கத்தின்மூலம் (Asexual Reproduction) மூன்று நிலைகளை அடைகின்றன அவைடிராப் போஸாய்ட், (Trophozoite) (Merozoite) மீரோ ஸாய்ட் (Schizont) சைஸான்ட் எனப்படும்

குருதியில் வந்து சேர்ந்த ஒட்டுண்ணியானது மெல்லியதாக, அமீபா போன்று ஒழுங்கற்ற வடிவத்தில் காணப்படும். இதனுள் சிறிய தட்டு வடிவ புரோட்டோ பிளாசம் தன்னகத்தே ஒரு உட்கருவைப் பெற்றுக் காட்சியளிக்கும். புரோட்டோ பிளாஸத்தில் ஒரு வெற்றிடம் (Vacuole) தோன்றி ஊட்டசத்தை ஒட்டுண்ணிக்கு அளிக்கும் செயலை மேற்கொள்கிறது இந்த வெற்றிடம் தனது உருவத்தைப் பெரிதாக்கிக் கொண்டு, சைட்டோ பிளாசத்தை ஒரு வளையமாக மாற்றுகிறது. இதனல் உட்கரு ஒரு ஓரமாகத் தள்ளப்படுகிறது. இந்த அமைப்பிற்கு சிக்னெட் வளையம், (Signetring), என்று பெயர்.

இந்த நிலையில் அமீபா போன்று நகரும் தன்மை கொண்டு செவ்விலங்களையே உணவாகக் கொள்கிறது மேலும் வளர்ச்சியடைந்த நிலையில்முன் தோன்றிய வெற்றிடம் மறைகின்றது. ஒன்று பலவாக பிரிந்து செவ்விலத்தின் அகம் முழுவதும் நிரம்பிக் காணப்படுகின்றது. இந்த நிலைக்கு சைஸோனட் (Schizont) என்று பெயர். இந்த நிலையில் இதன் சைட்டோ பிளாசம் முழுவதும் கருஞ்சிவப்பும், மஞ்சளும் கலந்த நிறதுகள்கள் பரந்து காணப்படுகின்றன. இந்த நிறத்தைக் கொண்ட துகள்களுக்கு ஹீமோசாய்ன (Haemozoin) என்று பெயர். ஹீமோசாய்ன், விலத்தில் காணப்படும் அயச்செந்தவளத்தில் (Haemoglobin) இருந்து தோன்றுகிறது.

சைஸொன்ட் (Schizont) என்கிற இந்த நிலையில் பருவம் அடைந்தவுடன் இதனுடைய உட்கரு இரண்டாகப் பிரிந்து சேய் உட்கருவை அளிக்கிறது சேய் உட்கருவானது விலங்களின் ஓரங்களைச் சென்றடைகின்றன பின்னர் சைட்டோபிளாஸம் பல துண்டுகளாகப் பிரிக்கப்படுகின்றன. ஒவ்வொரு துண்டு சைட்டோ பிளாசப் பகுதியும் ஒவ்வொரு சேய் உட்கருவை தன்னகத்தே சேகரித்துக்கொண்டு தனித்தனி விலங்களாக மாறிவிடுகின்றன. இந்த நிலைக்கு மீரோஸாய்ட் (Merozoite) என்று பெயர்.

மீரோஸாய்ட் நிலையில், செவ்விலம் உடைந்து, அதனுள் இருக்கும் விலங்கள் ஹீமோஸாய்ன் (Haemozoin) துகள்களுடன் இரத்த ஓட்டத்தில் விடுவிக்கப்படுகின்றன. இத்துடன் ஒருவித நச்சுப் பொருளும் சேர்ந்து, உடம்பில் மலேரியா சுரத்திற்குரிய குறி குணங்களைத் தோற்றுவிக்கும்.

இவற்றில் ஒருபகுதி மீண்டும் அமீபா போன்று நகர்ந்து தாபிதமடையாத செவ்விலத்தினுள் சென்று, மீண்டும் "டிராப்போஸாய்ட்" நிலையில் இருந்து, அக செவ்வில சுழற்சியைத் தொடங்கும். செவ்விலத்தின் அகம் மட்டும் நடக்கும் சுழற்சியை. 'கால்கி" என்ற விஞ்ஞானி கண்டுபிடித்ததால் இதற்கு "கால்கி சுழற்சி" என்றும் பெயர் உண்டு.

இவ்வாருக ஒன்று பலவாக பெருகி மனிதனின் குருதியில் பாதுகாப்பாக இருக்கின்றது. இப்படியே மனித உடலில் பெருகிக் கொண்டே போனல் குருதியில் காணும் எல்லாச் செவ்விலங்களும் தாபிதம் அடைந்து மனித உயிருக்கே ஆபத்தை விளைவிக்கும்.

மனிதன் இறந்துபடும்போது, உடலில் உள்ள மலேரியா ஒட்டுண்ணிகளும் இறந்துபடும், ஆதலால், வேறு ஒரு ஆரோக்கியமான ஆதாரத்திற்கு (Host) ஒட்டுண்ணிகள் கடந்து செல்வதன் மூலம் மலேரியா ஒட்டுண்ணிகளின் வாழ்க்கைச் சுழல் நிலை நிறுத்தப்படுகிறது. பின்னர் அனோபிலஸ் கொசுக்களை முழு ஆதாரமாகக்கொள்கிறது.

மீரோஸாய்ட் நிலையில் ஒரு பங்கு' கொசுக்களில் பால் இனப்பெருக்கத்தை (Sexual Reproduction) தொடங்குவதற்கு, கேமொட்டோஸைட் (Gametocyte) என்ற நிலையில் உருவாகின்றன.

பெண் இனக்கொசுக்களை அடைந்த பின்பே இதன் சுழற்சி துவங்கும். கேமொட்டோசைட் ஆக மாறிய பின் தனது ஆதாரத்தை (Host) அடையாவிடில் இறந்துபடும்.

கொசுவில் சென்றடைந்தபின் அவை தனது சுழற்சியைத் துவங்கும் மலேரியா சுரத்தினால் பாதிக்கப்பட்ட மனிதனை Anopheles கொசு கடிக்கும் சமயம், மலேரியா ஒட்டுண்ணிகளின் கேமொட்டோசைட் கொசுவின் வயிற்றில் இரத்தத்துடன் வந்தடையும், பின்னர் ஆண் பெண் இரு பாலாக பிரிபட்டு அவற்றால் "சைகோட்" (Zycote) உருவாகும். அதன் பின்னர் Ookinete, oocyst என்ற நிலைகளை அடையும். பின்னர் அதனின்று ஸ்போரஸாய்ட் (Sporozoites) என்ற நிலையை அடைந்து கொசுவின் உமிழ் நீர்க் கோளங்களை சென்று அடைகிறது இங்கிருந்து கோளங்களின் குழல்களில் தம்மை சேகரித்துக் கொள்கின்றன. இந்தக் கொசுவானது ஒரு ஆரோக்கியமான மனிதனைக் கடிக்கும்போது மலேரியா ஒட்டுண்ணிகள் இன விருத்திக்குக் காரணமான ஜீவ அணுவை உடம்பினுள் செலுத்துகிறது. பின்னர் ஈரலை அடைந்து புறச்செவ்விலச் சுழற்சியும் செவ்விலத்தில் அகச் செவ்விலச்சுழற்சியும் நடைபெற்று மலேரியா என்ற குளிர் சுரத்தை உண்டாக்குகின்றது.

**கிராணிக் கழிச்சலை தோற்றுவிக்கும் கிருமி**

குருநாடி நூலில் கிருமியால் உண்டாகும் கிராணி வரலாறு பற்றி கீழ் கண்ட செய்யுளால் அறியலாம்.

''கேளுமினிக் கிருமியால் வந்த
கிராணியைத்தான்
கிருபையுடன் மூலத்தில் வேவு கொண்டு
நாளுமது கிருமியதின் குடலைச்சுற்றி
ரத்தமுண்டாஞ் சுரோணிதத்தால்
மலமுங்கட்டி
மீளுவதுவாய்வு சென்று விரவித்தானும்
விரவியங்கே கலந்திருக்கில்
கிருமியெல்லாம்
கேளுமது பலவிதமாய்க் கழியும் பாலர்
குடிகெடுத்த கிருமி செய்த கிராணி
தானே.''

இரத்தத்தையும், சுரோணிதத்தையும் கெடுத்து அதோடு கழிச்சலை உண்டாக்கும் கிருமியின் பெயர் "என்டாமீபா ஹிஸ்டாலிட்டிக்கா" (Entamoeba histolytica) இவை உண்டாக்கும் கழிச்சலுக்கு மேனாட்டு மருத்துவர்கள் இக்கிருமியின் பெயரையே கொண்டு அமீபா கழிச்சல் என்று கூறுகின்றனர்.

இக்கிருமிகள் மனிதனின் புரீதக் குடலின் சுவரின் அகதாதகாணப்படும். இக்கிருமியினின்று சுரக்கும் ஒருவித திரவத்தால் புரீத குடலின் சளிசவ்வை (Mucous Membrane of colon) அழியச் செய்துதனது செயலைத் தொடங்குகிறது. இதனுடையசெயலைக்கொண்டே

இதற்குப் பெயரிட்டுள்ளனர்.

இவ்வமீபாவின் குறுக்கு விட்டம் .05 m. m. முதல் .06 m. m. வரை காணப்படும். இவற்றில் காணும் உருண்டையான உட்கருவை (Nucleus) சுற்றி ஒரு மெல்லிய அளவான சவ்வு காணப்படும். இவற்றைச்சுற்றி சிறிய உருத்திராட்சை வடிவ குரோமேட்டின் (Chromatin) துகள்கள் காணப்படும். உணவுக் குழிகள் (Food Vacuoles) காணப்படும். பெரும்பாலும் உணவுக் குழிகள் செவ்விலத்தால் (Red Blood Corpusceles) நிறைந்து இருக்கும். இவ்வாறு செவ்விலத்தைத் தன்னுள் இழுத்து உணவுக் குழிகளை நிரப்பும் சக்தி வேறு எந்தக் குடலில் வாழும் அமீபா இனத்திலும் காண முடியாது. ஒன்று அல்லது இரண்டுபொய்க்கால்கள் தோன்றியிருக்கும்.

**இனப்பெருக்கம் :-**

ஆமீபாவானது இரண்டிரண்டாகப் பிரிந்து (Binary Fission) தனது இனத்தை பெருக்கிக்கொள்கிறது.

இக்கிருமிகள் புரிதக் குடலின் சுவருக்குள் தங்கி நிலையான வளர்ச்சி அடைந்ததும் ஒன்று பலவாகப் பிரியத் தொடங்குகின்றன. பின்னர் புரிதக் குடலின் சுவரை விட்டு குடலினுள் பாவுகின்றன. பின்னர் தனது பொய்க் கால்களை (Pseudopodia) மறைத்து விடுகின்றன. பின் ஒரு கோளவடிவமாக மாறுகின்றன. இவ்வடிவத்தில் உட்கரு தெளிதாக காட்சியளிக்கும். உட்கருவைச் சுற்றி சுவர் உருவாகி சிறிய முட்டைகளாக உருவெடுக்கிறது. இம்முட்டையின் உள்ளே, தனக்குத் தேவையான உணவை கிளைக்கோஜன் (Glycogen) குரோமேட்டின் (Chromatin Masses) வடிவத்தில் தேக்கி வைத்திருக்கும். வளர்ந்த கிருமிகளில் காணப்படும் கம்பி வடிவத்திற்கு குரோமேட்டுட் உடம்பு (Chrometid Bodies) என்று அழைப்பர்.

முட்டைகளின் உட்கருவானதுமாற்றம் அடைகிறது. தாய்உட்கரு இரண்டிரண்டாகப் பிரிந்து பின்னர் நான்கு சேய் உட்கருவைத் (Daught Nucleier) தருகின்றது. இவற்றின் சுவர் ஒரு நிலையான வளர்ச்சி அடைந்ததும், சேகரிக்கப்பட்ட உணவுப் பொருட்கள் பயன் படுத்தப்படுகின்றன. பின்னர் வளர்ச்சியடைந்த முட்டைகள் மலம் கழியும் போது, மலத்துடன் வெளியே வந்து விடுகின்றன. மலத்தின் வழி வந்த முட்டைகள் சீதோஷ்ண நிலைக்கேற்ப நீண்ட நாள் வாழ்கின்றன. இந்த முட்டைகள் அசுத்தப்படுத்தப்பட்ட (Contaminated Water & Food) நீரின் வழியேயும், உணவின் வழியேயும் மனிதனின் இரைப்பைக்குச் செல்கிறது

இது எவ்வாறு நடைபெறுகிறது என்று பார்த்தால், அமீபிக் கழிச்சலுடைய மனிதன் கழிக்கும்மலத்திலுள்ள முட்டைகள், ஈக்களின் மூலம் கொணரப் பட்டு, நீர் அல்லது உணவு அசுத்த மாக்கப்படுகிறது. அந்நீரையோ, உணவையோ ஆரோக்கியமான மனிதன் உண்ணும்போது, அவன் பாதிக்கப்படுகிறான்.

இரைப்பையில் சென்றதும், ஜீரண அமிலங்களினால், முட்டைகளின் சுவர் பகுதி அழிந்துவிடும். ஒவ்வொருமுட்டையினுள்ளும் இருக்கும் நான்கு சேய் உட் கருவைக் கொண்ட அமீபாக் கிருமிகள் வெளிவந்து, நேராக புரிதக் குடலுக்குச் செல்கின்றன.

**செயல்படும் விதம் :**

புரீதக் குடலின் திசுக்களை, தன்னின்று வெளிப்படுத்தும் ஒருவித திரவத்தால் கேடடையச் செய்து, அவற்றில் பெரியபுண்களை (Ulceration) உண்டுபண்ணும். அப்புண்ணிலிருந்து அதிகமான குருதியும், சளியும் வரத் துவங்கும். பின்னர் கிருமிகள் புண்களின் வழியே அகத்தே சென்று. குருதி ஓட்டத்தில் கலந்து உடலின் பல பகுதிகளுக்கும் செல்கிறது. முக்கியமாக ஈரல் (Liver), பிலிகம் (Spleen), புப்புசம் (Lungs), மூளை (Brain) ஆகிய உறுப்புகளுக்குச் செல்கிறது. இவ்வுறுப்புகளில் அதிகமாக தாக்கப்படும் உறுப்பு ஈரல்.

இவ்வகையில் இக்கிருமி புரீதக் குடலில் செயல் புரிந்து, அமீபிக் கழிச்சலை உண்டாக்குகிறது.

**மருத்துவம் :**

மெழுகு வகைளில் ஊழி மெழுகு, சாதிக்காய் மெழுகு.

**பற்ப செந்தூரங்களில் :**

நாக பற்பம், முத்து பற்பம், பவள பற்பம், அன்னபேதி, சண்டமாருதம் பலகரைபற்பம், நத்தை பற்பம் போன்றவைகளைக் கொடுக்கலாம்.

**கிருமிகளை வழக்கில் தடுக்கும் முறை :**

நம் முன்னோர்கள் மஞ்சள் காப்பு, எண்ணெ முழுக்கு இவைகளைச் செய்து வந்தால் மலேரியா என்னும் மலைச் சுரத்தைப் பரவச் செய்யும் கொசுக்கள் கடிப்பதில்லை என்று ஆராய்ந்த ஆராய்ச்சியாளர்கள் 1945-ஆம் ஆண்டு ஜூலை மாதம் இந்திய மருத்துவ கெஜட்டில் வெளியிட்டுள்ளனர்.

வீடுகளின் தரைகளைப் பசுஞ் சாணத்தால் மெழுகியும் தெருக்களில் சாணப்பாலைத் தெளித்தும் வந்தபழைய வழக்கத்தினால் நுண்ணிய கிருமிகள் அழிக்கப்படுவதாக அறிகிறோம். இது தவிர குங்கிலியப் புகையினாலும், சாம்பிராணிப் புகையினாலும் கிருமிகள் அழிகின்றன. சாம்பிராணியில் பென்சாயிக் அமிலம் (Beun in Acid) என்ற சத்து உள்ளது. புகை நுண் புழுக்களையும் கெட்ட நாற்றத்தையும் போக்கும்.



# புற்றுநோய்

செல்வி. வ. ஆரோக்கியம் ஜுலியட் மேரி,
மூன்றும் ஆண்டு

இன்றைக்கு அறிவியல் வளர்ச்சி அடைந்துள்ள நிலையில் எத்தனையோ நோய்களுக்கு தீர்வு காணப்பட்டு விட்டது. எனினும் இன்னும் தீர்வு காணப்படவேண்டிய, சமுதாயத்தின் சாபக்கேடாக அமைந்துள்ள நோய்கள் சில. அவற்றில் இன்றைய ஆராய்ச்சி யாளர்களின் கவனத்தை ஈர்த்திருக்கும் தலையாய நோய் புற்றுநோய். ஆனல் இன்று நேற்றல்ல பல நூற்றுண்டுகளா கவே இந்நோய் மருத்துவ அறிஞர் களின் ஆய்வுக்கு உட்பட்டிருக்கிறது.

சங்க காலத்திலிருந்தே சித்த மருத் துவத்தில் புற்று நோயைப்பற்றிக்கூறப் பட்டுள்ளது. இதனைக் கடம்ப புராணம்' அகத்தியர் வல்லாதி அறுநூறு, புலிப் பாணி ஐநூறு போன்ற நூற்களின் வாயி லாக அறிகிறோம். இந்நூற்களில் புரை யோடிய புற்று, இடிப்புற்று, கன்னப் புற்று, இலிங்கப்புற்று, யோனிப்புற்று, அண்டப்புற்று, கால் புற்று போன்ற பல வகைப் புற்றுகளைப்பற்றிக் கூறப் பட்டுள்ளது.

''புழுச்செறி..................புற்றுநோய்''
(கடம்பபுராணம்)

''ஓமே நீ குறிப்புற்று மற்றப்புற்று
ஒளிவான இடிப்புற்று கன்னப்புற்று''
-(புலிப்பாணி ஐநூறு)

''அண்டத்தின் புற்றும் அரையாப்பு
விப்புருதி''

''கண்விழுந்த காற்புற்று கான்றேடும்''

''யோனி லிங்கப் புற்றினையு மோட்டு
நரம்புச்சிலந்தி''
-(அகத்தியர் வல்லாதி அறுநூறு)

**நோய் வரும் வழி :-**

நமது உடம்பு ஐம்பூதங்களான மண், விண், தீ, நீர், காற்று ஆகிய வற்றின் சேர்க்கையால் உருவாகியுள் ளது. இந்த ஐம்பூதங்களின் சேர்க்கை யால் ஆகிய உடம்பை இயக்குவதற் குரிய சக்தி வளி (வாதம்) அழல் (பித்தம் ஐயம் (கபம்) என்னும் மூன்று உயிர்த் தாதுக்களுக்கு உண்டு. வளி படைக் கும் தொழிலையும், அழல் காக்கும் தொழி லையும், ஐயம் அழிக்கும் தொழிலையும் பெற்று உடம்பிலுள்ள எல்லாவிடங் களிலும் (Cell) செயல்படுகிறது. இவற்றுள் படைக்கும் தொழிலுக்குக் காரணமான வாதம் உணவாதி பொருட்களாலும், வெளித்தூண்டுதல் களின் காரணமாகவும் தன் இயற்கை நிலையிலிருந்து வேறுபட்டு, தன் அளவில் மிகுந்து செயல்படும்போது, அது எவ்வுறுப்புகளின் மீது செயல் படுகிறதோ அவ்வுறுப்புக்கள் கட்டுப் பாடற்று வளர்கிறது. இவ்வாறு உறுப்பு களின் திசுக்கள் கட்டுப்பாடின்றி தன் அளவில் மிகுந்து வளர்ந்து துன்புறுத் தும் நிலை புற்று எனப்படும்.

**தற்கால நோக்கு :**

மனித உடலின் வளர்ச்சியானது பல விதிகளுக்கு உட்பட்டு ஒரே சீராக வளர்கிறது. இந்த உடல் வளர்ச்சி யானது ஒரு குறிப்பிட்ட வயதை அடைந்தவுடன் நின்று விடுகிறது. ஆனல் சில வேளைகளில் உடலின் சில பகுதிகளிலுள்ள நுண்ணறைகள் உடல்

இயல்விதி முறைகளுக்குக் கட்டுப் படாமல் தன்னிச்சையாக வளர்ச்சி யடைகின்றன. இவ்வாறுகட்டுப்பாடற்று வளர்ந்து உடலுக்குத் தீங்கு விளைவிக்கும் திசுக்களின் தொகுதி தான் புற்று நோய்.

இந்நோய் தோன்றுவதற்கான தெளிவான காரணங்கள் இன்று வரை தெளிவுபடுத்தபடவில்லை. சில காரணங்களை மட்டும் காண்போம்.

**புறக் காரணங்கள் :**

1. **வயது:**

இந்நோய்க்கு நடுத்தா வயதினரும் முதியவர்களும் தான் அதிகமாக இலக்காவதாகக் கண்டறிந்துள்ளனர். இந்த பருவங்களில் உடலில் நிகழும் வளர்சிதை மாற்றத்தில் ஏற்படும் ஒழுங்கற்ற நிலைதான் காரணமென்று நம்பப்படுகிறது.

2. **இரசாயனங்கள்:**

புற்றுநோய் தோன்றுவதற்கு முக்கிய காரணங்களுள் இரசாயனங்களும் ஒன்றாகும். தொழிற்சாலைகளில் புகைப்போக்கியில் படிந்துள்ள கரித்தூளை நீக்கும் தொழிலாளர்களுக்கும், அச்சுத் தொழிற்சாலையில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்கும் கைகளில் புற்றுநோய் வருவதாகவும், அனிலின் (Aniline) சாயத் தொழிற்சாலையில் பணிபுரிவர்களில் பலருக்குச் சிறுநீர்ப் பையில் புற்றுநோய்தோன்றுவதாகவும், பாரபின் (Parafin) "ஹைடிரோகார்பன் பென்ஸ் பைரேன்" (Hydrocarbon benzpyrane) போன்ற இரசாயனங்களால் தோலில் இந்நோய் தோன்றுவதாகவும் ஆராய்ச்சியின் மூலம் நிரூபித்துள்ளார்கள். இன்று சுமார் 300-க்கும் மேற்பட்ட இரசாயனங்களுக்குப் புற்று நோயை உண்டு பண்ணும் தன்மை உண்டென்று கண்டுள்ளனர்.

3. **கதிர் வீசல் :**

"எக்ஸ் கதிர்கள்" (X-Rays) ரேடியம் கதிர்கள் (Radiam rays) போன்றவைகள் உடலில் பாய்வதால் உடலிலுள்ள விலங்களின்(cell)விலசகங்களை (Nucleus) சிதைத்து அதன்மூலக் கூறுகளை மாற்றிவிடுகிறது. இதனால் புற்றுநோய் தோன்றுவதாக ஆராய்ச்சியில் நிருபிக்கப்பட்டுள்ளது. பொதுவாக இத்தகைய கதிர்களைப் பயன் படுத்தும் ஆய்வுக் கூடங்களில் பணியாற்றும்விஞ்ஞானிகளுக்கும் மருத்துவர்களுக்கும் ஏனையோரை விட எளிதில் புற்றுநோய் தோன்றுகிறது.

4. **வைரஸ் (Virus)**

சிலவகையான "வைரஸ்" கிருமிகள் உடலில் புற்று நோயை உண்டு பண்ணுகின்றன. "ரியோவைரஸ்" (Reoviruses) என்ற நுண்ணுயிர்கள் மனித உடலில் புற்றுநோயை உண்டு பண்ணுகின்றதென்று தற்கால விஞ்ஞானிகள் நிரூபித்துள்ளார்கள்.

5 **உறுத்தல்:** (Chronic irritation)

சில பகுதிகளில் ஏற்படும் நீடித்த உறுத்தலின் காரணமாகவும் புற்று நோய் ஏற்படுவதாக கண்டறியப்பட்டுள்ளது புகைபிடிப்பது நுரையீரல் புற்றுநோய்க்கு முதற் காரணமென்று நம்பப்படுகிறது. சிகரெட் புகையில் இருக்கும் இரசாயனங்கள் நுரையீரல் திசுக்களை அரிக்கின்றன. இவ்வாறு பாதிக்கப்பட்ட திசுக்களில் "வைரஸ்" போன்ற கிருமிகள் தங்கிக் கொண்டு புற்று நோயை ஏற்படுத்துகின்றன. இது போல் வெற்றிலை,

புகையிலை இவற்றை மெல்பவர்களுக்குத் தாடையிலும், தொண்டையிலும் புற்று நோய் வரலாம் என்று எண்ணப்படு கிறது

அகக் காரணங்கள்:

1. இனப்பெருக்க உள்ளிடைச் சுரப்பிகள்: (Sex harmones)

இனப் பெருக்க உள்ளிடைச் சுரப்பிகளின் முப்புகளான 'ஈஸ்டிரின்' (Estrin), ஆண் இனப் பெருக்கமுப்பு (male sex harmone) இவைகளின் காரணமாகவும் புற்றுநோய் உண்டாவதாக அறியப்படுகிறது.

2. உணவின் தன்மை: (Dietary factors)

நாம் உட்கொள்ளும் உணவில் உயிர்த்தாதுக்கள் தேவையான அளவிற்கு இருப்பின் (Vitamins) அவை புற்று நோயை வரவிடாமல் காக்கின்றன. தவிர 'கோலின்' (Choline) என்ற ஒருவிதமான சத்து உடலில் குறையுமேயானால் புற்று நோயைத் தோற்றுவிக்கின்றது.

நோய்க் கணிப்பு: (Diagnosis)

தோலில் முதலில் கறுப்பு நிறத்துடன் தட்டையான தடிப்புகள் காணப்படும். இவை கண்டுகளாகவும், கட்டிகளாகவும் காணப்படும். இவற்றின் எல்லை வரம்புகள் தெளிவாக காணப்படாமல் சுற்றுப்புறத் தோலுடன் கலந்து தெளிவற்றதாக இருக்கும். இவை நாளடைவில் உடைந்து புண்ணாகும். இது போல் வாயிலும் புற்றுக் கட்டிகள் உடைந்து புண்ணாகும். புண்ணின் விளிம்புகள் புடைத்தும், ஆருததாகவும், அடிப்பாகம் கடினமாகவும் காணப்படுவதிலிருந்து மற்ற புண்களை புற்று நோயிலிருந்து பிரித்தறியலாம். உணவுக் குழலில் புற்று ஏற்பட்டால் உணவுக் குழல் சுருங்கி உணவை விழுங்கும் போது வலி உண்டாகும். குடல், இரப்பை, சிறுநீர்ப்பை இவற்றில் ஏற்பட்டால் கட்டிகள் தண்ணீர்ப்பை போன்று தொங்கிக் கொண்டிருக்கும். மார்பகத்தில் ஏற்படும் புற்று கடினமான கட்டிகளாக கைக்குத் தட்டுப்படும். இவற்றின் மேல் தோல் கட்டியுடன் இணைந்து, வீக்கமடைந்து, கரடு முரடாகக் கோழி முட்டை போன்ற வடிவத்தில் இருக்கும். முலைக்காம்பு உள்ளே அழுந்திஇருக்கும். மார்பகத்தின் மேல் தோலில் சுருக்கங்களும், சிறு பள்ளங்களும் காணப்படும். நாட் செல்லச் செல்ல உறுதியான கல் போல் மேல் தோலுடனே அல்லது மார்பறையின் முன் சுவருடனே இணைந்து அசைக்க முடியாதபடி இருக்கும்.

"Radio autograph" என்ற முறையில் கதிர் வீசலின் மூலமாக புற்றுநோய், நுண்ணறைகளைப் படம் பிடித்து புற்று நோய்தான் என்பதை அறியலாம்.

குருதிப் புற்ருக இருந்தால் சோர்வு களைப்பு, மண்ணீரல் பருத்தல், போன்ற குறி குணங்கள் காணப்படும். இவை பிற நோய்களிலும் காணப்படும் குறி குணங்களாதலால் இரத்தப் பரிசோதனை மூலம் எளிதாக அறியலாம்.

நோய்ப்பட்ட இடத்திலிருந்து சிறிது திசுவை எடுத்துச் சோதனை செய்வதன் மூலம் புற்று நோயை முடிவாக அறியலாம்

மருத்துவம்:

சித்த மருத்துவத்தில் புற்று நோய்க்கு வெண் கொடி வேலி

(Plumbaga Zeylanica) சிறப்பாக பயன் படுத்தப்படுகிறது. இம் மூலிகையைக் கொண்டு தயார் செய்யப் படும் "சித்திரமூலக்குளிகை" யோனிப் புற்று, இலிங்கப்புற்று இவைகளுக்குச் சிறப்பாக வழங்கப்படுகின்றது.

"சித்திரஞ்சேர் மூலமதே சீராக்க மூஞ்சி
யொன்று
கத்திரஞ் சேர் பூரமது வுங்கழஞ்சு
— சத்தியங்கேள்
ஓமமோ ருகழஞ்சி யோது பனே வெல்ல
மொடு
சாமமி ரண்டு தானரைப்பாய் தான்
அரைத்து மிளகளவு அன்பான வுண்டை
செய்து தரையிலொரு பத்து தினந்
— தானருந்த நிறை குழலே
ஏதுக் கலேகிருய் ரணக்கிரந்தி ரணங்களொடு
மாதர்களே! யோனிப் புற்று மாறும்
"மாறுமே தலைபெல்லாம் வரக்கள்ளி
பூக்கிரந்தி
தீருமே லிங்கப்புற்று பவுத்திர நீர்
—சீறுங்
கன்னப் பிளவை பக்கம் காணும்
படுப்பிளவை
என்ன சொல்வேன் மார் சிலந்தி யோடும்.
ஓடுமே விப்புருதி ஓடுகின்ற குன்மமெட்டும்
நாடுதனில் மேகரணம் நாடாது
— மாடுகளே!
காடுதனில் மூலிகையைக் காணுமலே
னலேவீர்
வீட்டிலிருந் திம்முறை செய் மின்"
— அகத்தியர் குணவாகடம்

தவிர தற்பொழுது நடைபெறும் ஆராய்ச்சியில் மூங்கிலி (Bambusa Arundinaceae) லிருந்து எடுக்கப்படும் சத்துவைக் கொண்டு புற்று நோயை ஓரளவிற்கு குறைக்க முடியும் என கண்டறியப் பட்டுள்ளது.

மேலும் கெளசிகர் குழம்பு. நந்திமை, வான்மெழுகு போன்றவை களும் வழங்கப்படுகின்றன.

வெளிப்பூச்சாக துர்மாமிசத்தைக் கரைத்து வெளியேற்ற சித்த மருத்துவத்தில் ஒரு பாடாணமாக விளங்கும் தாளகத்தைக் கொண்டு தயார் செய்யப்படும் "பச்சை எருவை" என்ற களிம்பைப் பயன்படுத்தலாம்.



# நஞ்சறுப்பான்

M. S. சுகுமார்,
இரண்டாம் ஆண்டு

தற்காலத்தில் நாகரிகம் முன்னேருத இடமேயில்லை. மனிதரின் ஆடைகள், பேச்சு, பழக்க வழக்கங்கள் அனைத்திலும் இது விடவில்லை. நோயையும் இந்நாகரிகம் பற்றிக்கொண்டுள்ளது என்ருல் ஆச்சரியப்பட இடமில்லை. தற்பொழுது நாகரிகமாக எல்லோரும் சொல்லிக்கொண்டிருக்கும் நோய்தான் "ஈசனே ஃபிலியா" [Eosinophilia]

இந்நோயானது குருதியில் நாகப்பட வெண்விலங்களின் [Eosinophils] எண்ணிக்கை அதிகரிப்பதால் உண்டாகிறது. இயல்பான நிலையில் குருதியில் இது 2 முதல் 8 விழுக்காடு கூட இருக்கலாம், 8 விழுக்காட்டிற்கு மேலும் அதிகரிக்குமாணல் இந்நோய் உண்டாகிறது. இதைத் தக்க மருத்துவம் செய்யாது விட்டால் ஆஸ்த்துமா என்றழைக்கப்படும் இரைப்பு நோய் வரக்கூடும். இரைப்பு நோய் வருவதற்கான பல காரணங்களுள் இதுவும் ஒன்று. இந்நோய்க்கு சித்த மருத்துவத்தில் பலவித சிறந்த மருந்துகள் உள. அவற்றுள் ஒன்று **நஞ்சறுப்பான்.**

**பெயர்க் காரணம்:-**

பழங்காலத்தில் பலவித நஞ்சுகளுக்கு முறிவாக இதனைப் பயன்படுத்தினர். நஞ்சை அறுக்கும் தன்மையுள்ளதால் இதனை நஞ்சறுப்பான் என வழங்கினர்.

**பயன்படும் உறுப்பும் வளருமிடமும்:-**

இந்தியாவின் தெற்குப் பகுதிகளில் குறிப்பாக கன்னியாகுமரி மாவட்டத்தில் வேலியோரங்களில் அதிகமாக வளரும் ஒருவகை சுற்றுகொடி. இத்தாவரத்தின் எல்லாப் பாகங்களும் பயன்பட்டாலும் குறிப்பாக இதன் வேரும் இலைகளுமே அதிகம் பயன்படுகின்றன. சித்த மருத்துவத்தில் இம்மூலிகை நாய்ப்பாலை, நஞ்சுமுறிச்சான் என்ற பெயரை உடையதாகவும், கேரளத்தில் வள்ளிப்பாலை, வடநாட்டில் அந்தமூழ் என்ற பெயர்களையும் உடையதாக இருக்கிறது. நமது மருத்துவத்தில் இதனை விஷக்கடி பாம்புக்கடி, இடுநஞ்சு போன்றவைகட்கு எதிர் மருந்தாக [Antidote] பயன்படுத்துகின்றனர். இதனைக்கீழ்க் காணும் செய்யுளால் அறியலாம்.

தொடு நஞ்சு தாவரத் துய்க்குநஞ்சு
மற்றோர்
இடு நஞ்சுத் தாவர நஞ்சேறிப்
— படு நஞ்சுங்
கூண்டுடனே காதோ குயின்மொழியாய்
நஞ்சறுப்பான்
பூண்டுதனை நீயெடுக்கும் போது.

(அ. கு)

**நோயும் மருத்துவமும் :-**

இதனின்று தைலோபோரின் [Tyloporin] என்னும் தாவரச்சத்து [Alkaloids] எடுக்கப்படுகிறது. இதன் இலைகளை உலர்த்திப் பொடியாக்கி இதிலிருந்து இந்திய ஐபெக் [Indian Ipec]தயாரிக்கிருர்கள். இந்தப்பொடியை சீதபேதிக்கும், செரியா கழிச்சலுக்கும், மற்றும் காய்ச்சலின் ஆரம்ப நிலையிலிருப்பவர்களுக்கும் 10 முதல் 15 அரிசி எடை வரை ஒரு அவுன்ஸ் நீரில் கலந்து கொடுக்கத் தீரும். கொய்னவுடன் கலந்து கொடுக்க மலேரியாவையும்,டைபாய்டு சுரத்தையும் போக்குகிறது. இதன் பொடியை (5 அரிசி எடை) நாட்டுச் சாராயத்தில் கலந்து சாப்பிட்டு வர சுவாச

பாதையில் ஏற்படும் சுவாசத் தடையையும், நுரையீரல் சம்பந்தப்பட்ட நோய்களையும் கோழையகற்றி செய்கையாக நின்று அகற்றுகிறது. குழந்தைகட்கு ஏற்படும் கக்குவான் இருமலையும் நீக்குகிறது, மேக நோயினால் ஏற்படும் வாத சம்பந்தமான நோயையும் போக்குகிறது. இருதய வெப்பமுண்டாக்கியாகவும், குருதியை சுத்தப்படுத்தும் மூலிகையாகவும் செயல்படுகிறது. மேன்மேலும் இதனைச் சொல்லிக்கொண்டே செல்லலாம்.

இம்மூலிகையின் சத்தான "டைலோபோரின்" நீரில் கரையாது. ஆல்கஹால், ஈதர் போன்றவைகளில் எளிதில் கரையும் கோழையகற்றி, வாந்தியுண்டாக்கி, இருதய வெப்பமுண்டாக்கி, உடல்தேற்றி போன்ற செய்கைகளையுடைய மருந்துகள் இவற்றினின்று தயாரிக்கலாம். இதன் இலையைவிட வேரே அதிக சக்தியுள்ளது.

**இரைப்புக்கு நஞ்சறுப்பான் மருத்துவம்:-**

டெல்லி வல்லபாய் படேல் செஸ்ட ஆய்வுக் கூடத்தில் டாக்டர் சிவபுரி என்ற பேராசிரியர் இம்மூலிகையில் பல ஆராய்ச்சிகள் செய்து ஒவ்வாமை இரைப்புக்கு [Allergic Asthma] இதன் இலைகள் சிறந்த மருந்தெனக் கண்டுள்ளார்.

**நோய் தீரும் விதம்:-**

சுவாச குடோரி என்பது ஒருவகை மாத்திரையாகும். இம்மாத்திரையில் வெள்ளெருக்கம்பூ, மிளகு இரண்டும் சேர்கிறது. வெள்ளெருக்கம்பூவில் "கலோடிராபின்" [Calotropine] என்ற சத்து உள்ளது. இச்சத்தானது நுரையீரலில் உள்ள சுவாசக் கண்ணறைகளை [Bronchiols] விரிவடையச் செய்யும் தன்மையுள்ளது. [Broncho-dilator] மேலும் மிளகிற்கு காரலை உண்டாக்கும் தன்மையுள்ளதால் சளியை வெளியேற்ற உதவும். இந்நோய் வருவதே சுவாசப்பாதையின் பாகங்களிலும் நுரையீரலையும் சுற்றி பரவி அடர்ந்துள்ள சளியே காரணமாகும். இச்சளியின் காரணமாக நுரையீரல் தமது தொழிலை சரிவர நடத்த முடியாமலுள்ளதால் இது ஏற்படுகிறது எனவே இவ்வித ஒவ்வாமை இரைப்பு நோயாளிகளுக்கு சளியை இளக்கும் தன்மையுள்ள மருந்துகளுடன் சேர்த்து இதனைத் தருகின்றனர்.

நஞ்சறுப்பான் சளியை இளக்கும் தன்மையுள்ளதால் இது கோழையகற்றியாக வேலை செய்கிறது நஞ்சறுப்பானைப்பற்றியும் மக்களுக்கு இது பயன்படும் முறையை பற்றியும் இந்திய முறை மருத்துவக் கல்லூரி பட்டமேற்படிப்புப் [M. D.] படிக்கும் மருத்துவர் ஆராய்ந்து கொண்டு வருகிறார்கள். இதன் மூலம் மேலும் பல நன்மைகளை மக்களுக்குச் செய்ய பல ஆய்வுகளைப் பயன்படுத்தலாம்.



# "உணவே மருந்து மருந்தே உணவு"

இரா. மாதவன், எஸ். ரெங்கநாதன், முதலாமாண்டு பி. ஐ. எம்.

## நம் வீட்டில் இரும்பு

ரத்தம் குன்றி முகம் வெளிற எலும்பு தெரியச் சோணி போல் குழந்தைகள் பலர் இன்று அலைகின்றனர். விரிந்த மார்பு, நிமிர்ந்த நடை, இரும்புத் தோட்கள் இவற்றை இன்று காணோமே! எல்லாம் இரத்தம் குறைந்ததால் வந்ததே! நம் மசாலைச் சாமான்களில் ஒன்று வெந்தயம். இது இரும்புச் சத்து மிகுந்தது. வெந்த + அயம் = வெந்தயம், நீற்றுப்பட்ட இரும்புச் சத்து. அயம் என்றால் இரும்பு அல்லவா! வெந்தயக் களி ரத்த சோகையை நீக்கும். வாத நோயுற்றவர் வெந்தயத்தைப் பசு மோரில் ஊற வைத்து காலையில் அரைத்து வெல்லம் சிறிது சேர்த்து உண்டால் திடம் பெறுவர். தோசை வார்க்க மாவு அரைக்கும் போது உளுந்துடன் சிறிது வெந்தயம் சேர்த்துக்கொள்வது நல்லது. வெந்தயக் குழம்பு சுவையும், சத்தும் உள்ளது. வெந்தயக்குழம்பில் வத்தலும் சேர்த்துக் கொள்ளலாம் அறு கீரையும் இரும்புச் சத்து மிக்கதே! அதை அரைக் கீரை என்பர் கூடியவரை அன்றாடம் கீரை உண்பது நல்லது குறைந்த விலை நிறைந்த சுகம்!

## உள்ளே குளிர்கிறது

சீர்மை என்றால் குளிர்ந்த நாடு என்று பொருள். சீர்க்குணம் என்ற நோய் குழந்தைகளுக்கு வரும் உடம்பு குளிர் அடைவதே இந்நோயின் அறிகுறி. சீர் + அகம் = சீரகம். அகம் என்றால் உள்ளே உள்ள உறுப்புக்கள் சீரகம் உள் உறுப்புகளைக் குளிர வைப்பது. மேகம், வெள்ளை, வெட்டை முதலியன கொடியநோய்கள். செவ்விள நீரின் மூடியைத் திறந்து உள்ளே சீரகத்தைப் போட வேண்டும், காலையில் வெறும் வயிற்றில் அச்சீரகத்தைத் தின்று இளநீர் அருந்த வேண்டும். மூன்று நாளில் மேகம் நிற்கும். வேனல் காலம் வரும் பிள்ளைகள் முகத்தில் கட்டி, காளான்கள் போலக் கிளம்பும் அப்போது அவர்கள் குடிக்க வேண்டியது சீரகக் கஷாயம். ஒரு விட்டர் தண்ணீரில் மூன்று தேக்கரண்டி சீரகமும், பத்து முந்திரிப் பழம் போட்டு இரவு அடுப்பில் போடவேண்டும். காலையில் கஷாயம் ரத்தம்போல இருக்கும். அஸ்கா சர்க்கரை சேர்த்துச் சாப்பிட வேண்டும். வேனல் கட்டி மறையும். ரசத்தில் மிளகு, சீரகம் சேர்ப்பது குளிர்ச்சிக்காகவேதான்.

ஒரு ரகசியம்! தாய் தகப்பன் கருப்பாக இருக்கிறார்கள் என்று வைத்துக்கொள்வோம் அவர்களுக்குத் தங்கள் பிள்ளை சிவப்பாக இருக்க வேண்டுமென்று ஆசை. ஆசைக்கு அளவில்லையே! ஒரு பெண் கருத்தரித்த மூன்றும் மாதத்திலிருந்து ஏழாவது

# VICE CHANCELLOR'S VISIT



Vice Chancellor and his team witnessing the strides of progress



Within the four walls



Inside the ward



Under the greenwood tree

# Hostel Day. 16-2-74



Deputy Warden presents the report



Director of Indian Medicine addresses the Hostelers



Dr. M. V. Ramanan addresses



Kathakalatchebam in progress



"This bag I brought to snatch the First Prize!"

# விடுதி நாள் ஆண்டு அறிக்கை

டாக்டர் எம். சுந்தரம், B. I. M.
உதவி விடுதி காப்பாளர்

இக்கல்லூரி விடுதி தின விழா 16—2—74 அன்று மாலை 6–00 மணியளவில் வண்ணூர்பேட்டை ஆண்கள் விடுதியில் டாக்டர் பொன். குருசிரோன்மணி, பி. ஏ. ஜி. சி. ஐ. எம்., முதல்வர், விடுதிக் காப்பாளர் அவர்கள் தலைமையில் நடந்தது. அவ் விழாவிற்கு தலைமை விருந்தாளியாக டாக்டர். பு. மு வேணுகோபால், எச்.பி.ஐ.எம். இந்திய மருத்துவத் துறை இயக்குநர் அவர்களும், விசேஷ விருந்தாளியாக டாக்டர் எம். வி. ரமணன், எல். ஐ. எம்., மேற்பட்டப் படிப்பு மருத்துவ பேராசிரியர் அவர் களும் அழைக்கப்பட்டார்கள். அந்த விழாவில் உதவி விடுதிக் காப்பாளர் டாக்டர் எம். சுந்தரம், பி. ஐ. எம்., அவர்கள் விடுதி அறிக்கையை வாசித்தார். அவ்வறிக்கை விபரம் வருமாறு:-

1964-ம் ஆண்டு நவம்பர் திங்களில் ஏறக்குறைய 60 மாணவர்களுடன் இவ்விடுதி, அப்போதைய காப்பாளரும் இப்போதைய இயக்குநருமான டாக்டர் பு. மு. வேணுகோபால் அவர்களை காப்பாளராகவும், டாக்டர் இரா. தியாகராஜன் அவர்களை உதவி காப்பாளருமாகவும் கொண்டு தொடங்கப்பட்டது. இக் கல்லூரி விடுதி ஆரம்பிக்கப்பட்ட போது விடுதிச் சூழ்நிலை மாணவர்களுக்கு ஏற்றதாக இல்லை இப்போதைய இயக்குநர் அவர்கள் முன்னாள் முதல்வராக இருந்தபோது எடுத்துக் கொண்ட முயற்சியின் பயனாக சீர்திருத்தங்கள் பல உடனுக்குடனேயே செய்யப் பட்டன, மின் விசிறிகள் முதல் பல புதிய அறைகள் வரை அனைத்து முன்னேற்ற மும் தற்போதைய இயக்குநர் அவர்கள் முதல்வராக இருந்த காலத்தில் தான் நிகழ்ந் தது என்றால் அது மிகையாகாது.

அவரைத் தொடர்ந்து முதல்வர் டாக்டர் க. சு. உத்தமராயன் காப்பாளராகப் பொறுப்பேற்றார் மதிப்பிற்குரிய தற்போதைய இயக்குநர் டாக்டர் பு. மு. வேணு-கோபால் அவர்களும் டாக்டர் க. சு. உத்தமராயன் அவர்களும் காப்பாளர்களாக இருந்தபோது விடுதிக்குள் அமைக்கப்பட்டிருக்கும் வீட்டிலேயே தங்கியிருந்து வந்தார்கள். விடுதிக் காப்பாளருக்கும் உள்ளேயே வீட்டு வசதி செய்து தரப் பட்டுள்ளது.

டாக்டர் க சு, உத்தமராயன் அவர்கள் இயக்குநராகப் பொறுப்பேற்றதும் அவரைத் தொடர்ந்து முதல்வராக டாக்டர் பொன் குருசிரோன்மணி அவர்கள் காப்பாளராக பொறுப்பேற்று தன் சொந்த வீட்டில் தங்கி வருகிறார்கள். உதவி காப்பாளராக டாக்டர் இரா. தியாகராஜன் அவர்களைத் தொடர்ந்து முதல் முதலாக பி ஐ எம் பட்டதாரி டாக்டர் தே. தேவாசீர்வாதம் சாமுவேல் அவர்களும் அவரைத் தொடர்ந்து டாக்டர் கு. பரமேஸ்வரன் அவர்களும் அவரைத் தொடர்ந்து டாக்டர் மு. ப. ராமனுதன் அவர்களும் உதவி விடுதிக் காப்பாளர்களாக இருந்து வந்திருக்

கிருர்கள். டாக்டர் மு. ப. ராமனுதன் அவர்கள் உறைவிட மருத்துவ அதிகாரியாக நியமிக்கப்பட்டதைத் தொடர்ந்து டாக்டர் எம். சுந்தரம் அவர்கள் உதவி விடுதிக் காப்பாளராக 1—1—74 முதல் பொறுப்பேற்று பணியாற்றி வருகிருர்கள்.

விடுதியில் மாணவ, மாணவிகளின் எண்ணிக்கை வருமாறு:- மாணவர் விடுதியில் மாணவர்கள் 71-ம், பயிற்சி மருத்துவர்கள் 15-ம் முதுநிலைப் பட்டப் படிப்பு மாணவர்கள் 3-ம் அதைப்போன்று பெண்கள் விடுதியில் மாணவியர்கள் 26-ம் பயிற்சி மருத்துவர்கள் 4-ம் முதுநிலைப் பட்டப்படிப்பு மாணவியர்கள் 2-ம் டி. பார்ம் மாணவி 1-ம் ஆக மொத்தம் 122.

ஆரம்பத்தில் மாணவர்களிடமிருந்து தங்கும் அறை வாடகை அரசு கட்டளை எம். எஸ். 183 சுகாதாரம் தேதி 27—1—1965 படி வசூலிக்கப்படவில்லை. பின்பு அரசு கட்டளை எம். எஸ். 896 சுகாதாரம் தேதி 12—7—1972 படி தங்கும் அறை வாடகை வசூலிக்கப்பட்டு வருகிறது. பெண்கள் விடுதிக்கென்று 12 தனி அறை களைக்கொண்ட புதிய விடுதிக் கட்டிடம் ஒன்று கட்டப்பட்டுள்ளது. ஆண்கள் விடுதிக்கு உணவு வழங்கும் பகுதி ஒன்று புதிதாகக் கட்டப்பட்டிருக்கிறது. கல்லூரி விடுதிக்கான கட்டிடங்கள் இன்னும் கட்டப்பட வேண்டிய நிலையில் உள்ளன. இப்போதைக்குள்ள பழைய கட்டிடங்கள் பொதுப்பணித் துறையினரால் சமீபத்தில் பழுது பார்க்கப்பட்டுள்ளது. மாணவர் விடுதியில் கிட்டத்தட்ட பாதிக் கட்டிடங்கள் வரை மின்சார சீரமைப்புகள் செய்யப்பட்டுள்ளன. மீதமுள்ள பகுதிகள் இன்னும் சீரமைக்கப்பட வேண்டிய நிலையிலுள்ளன, அவ்வப்பொழுது நிர்வாகப் பொறி யாளர், பொதுப் பணித்துறை அவர்களும் விடுதி அங்கத்தினர்கள் வேண்டுகோளை தங்களால் இயன்ற அளவு நிறைவேற்றி தருகின்ருர்கள். விடுதிக்கென்று தொலை பேசி, புதிய கட்டிடம், எஞ்சியுள்ள சீரமைப்புகள், தண்ணீர் வசதிக்கான கிணறு வெட்டுதல் போன்றவைகள் சம்பந்தப்பட்ட அதிகாரிகளுடன் தொடர்பு கொள்ளப் பட்டுள்ளது.

ஆண்கள் விடுதியில் ஒப்பந்த உணவுக்காரர் திரு. ஜோசப் ஆப்ரகாம் என்பவர் உணவு வழங்கி வருகிருர். பெண்கள் விடுதியில் பங்கீட்டு முறையில் உணவு வழங்கப்பட்டு வருகிறது. விடுதியையும் கல்லூரியையும் கல்லூரிப் பேருந்து இணைக்கிறது. மாணவர், மாணவியருக்கு சமீபத்தில் ஒரு இரும்புக் கட்டில் வழங்கப்பட்டுள்ளது. விடுதியில் தற்போது முதலாண்டு முதல் இறுதி ஆண்டு மாணவர்களுடன் பயிற்சி மருத்துவர்களும் முதுகலை பயிலும் மாணவர் களும் தங்கி வருகிருர்கள். விடுதியானது மாணவர்களின் பொதுக் குழுவால் நியமிக்கப்பட்ட செயற்குழுவின் உதவியுடன் இயங்கி வருகிறது.

விடுதி நாள் விழாவைப் பொறுத்த வரை, கடந்த வருஷம் டாக்டர் மு. ப. ராமனுதன் அவர்களின் உதவியுடன் டாக்டர் ராமாபாய் பொன்னுதுரை, திரு பொன்னுதுரை, தினமலர் ஆசிரியர் திரு. ராமசுப்பிரமணியன் அவர்கள்

போன்ற விசேட விருந்தாளிகளைக்கொண்டு விடுதி நாள் விழா நடத்தியுள்ளார்கள் என்றும் இங்கு குறிப்பிட விரும்புகிறேன்.

இவைகளுக்கிடையே மாணவர்கள் கீழ்க்கண்ட குறைகளை அவ்வப்போது வலியுறுத்தி வருகிறார்கள்.

1. ஏனைய மருத்துவக் கல்லூரிகளின் விடுதிகளைப் போன்று புதிய கட்டிடம்.

2. தற்போதுள்ள விடுதி அறைகளில் சுழல் விளக்குகள்.

3. விடுதிக்கென்று தொலைபேசி வசதிகள்.

4. தற்சமயம் தங்கும் அறை வாடகையை தற்பொழுதுண்டான குறைந்த வசதிகளின் பொருட்டு விலக்கல் (தவிர்த்தல்).

5. ஏனைய மருத்துவக் கல்லூரிகளில் உள்ளது போன்று எழுத்தர் சம்பள பகிர்வை நீக்குதல்.

6. பயிற்சி மருத்துவர்களுக்கென்று தனி கட்டிடம் வழங்குதல்.

மேற்கண்டவைகள் சம்பந்தமாக சம்பந்தப்பட்ட அலுவலகங்களுடன் தொடர்பு கொள்ளப்பட்டது.

---

# எலும்பு முறிவு

டாக்டர் மு. மரியலாரன்ஸ், பி. ஐ. எம்.

என்புத் தொடர்ச்சியின் துணிப்பே என்பு முறிவு எனப்படும். (A break in the continuity of a bone) எலும்பு முறிவிற்கு நேர்காரணம் (Exciting causes) உபகாரணம் (Secondary causes) என இரண்டு வகையான காரணங்கள் உண்டு.

### 1. நேர்காரணங்கள்

ஆயுதங்கள் போன்றவை நேரடியாகத் தாக்கும்போது (Direct violence) தாக்கிய இடத்தில் எலும்பு முறியும்.

அடிபட்ட இடத்திற்கு சிறிது தள்ளி எலும்பு முறிவது (Indirect violence) உதாரணமாக கால் எலும்பு அல்லது தொடை எலும்பில் அடிபடுவதால் முழங்கால் சில் சேதப்படுவதைக் குறிப்பிடலாம்.

### 2. உபகாரணங்கள்

எலும்பு முறிவதற்கு வயது, நோய்கள் முதலியனவும் காரணமாகும்

### வயது

இளம் பிராயத்தில் சிறுவர்கள் தவறி விழுவதும் அல்லது ஓடியாடி திரியும் சமயங்களில் கீழே விழுந்தோ அல்லது எலும்பு புரண்டோ ஒடிவது இயற்கையாக நிகழுகின்றன. இளம்பிராயத்தில் எலும்பின் அந்தங்கள் முற்றுப்பெருத குறுத்தெலும்பு (epiphysi's)களாக இருக்கும். இதிலிருந்து தான் எலும்பு வளர்ச்சி அடைந்து நீண்டு வளரும். அப்பொழுது உடல் வளர்ச்சியும் ஏற்படும். எலும்புகளின் அந்தங்களுக்கு நடுவில் வெகு காலம் குறுத்தெலும்புத்தகடு இருந்து தக்க வயது வந்த பின்தான் இரண்டும் கூடும். அதனுல் இளம் பிராயத்தில் எலும்பு முறிவென்ருல் எலும்பின் முனை நழுவல் என்றே (Separation of epiphysis) கூற வேண்டும். இதுபோல் வயது முதிர்ந்தோரின் எலும்பு அதிகமான அசைவினுல் மெலிவு (Atrophy) அடைந்து தேய்ந்து போவதால் ஒடிந்து போகும் உதாரணமாக தொடை எலும்பு கழுத்து உறைக்குள் முறிந்து போவது, (intra-capsular fracture)

### பொது நோய்கள்

எலும்பைத் தாக்கும் நோய்களான அத்தி மராளகம் (Osteomalacia) பக்கவீதனக் கோளத்தில் (Parathyroid) கழலைகள் ஏற்படுதல், இரத்தத்தில் கால்சியம் உப்பு (Calcium) அதிகரிப்பதால் உண்டாகும் நோய்கள், நரம்பு நோய்கள், கிரந்தி, மேக நோய், அத்திமச்சராரம் (Osteomyelitis), கழலை, பிளவை போன்றவைகளாலும் எலும்பு முறிவுகள் ஏற்படுவதுண்டு.

### முறிவின் வகைகள்

எலும்பு முறிவானது முறிவின் தன்மைகளைப் பொறுத்துப் பலவகைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

**சாதாரண முறிவு (Simple fracture)**

எலும்பு ஒரே இடத்தில் வெளிக்காயம் இல்லாமல் ஒடிந்து இருப்பது

**கலப்பு முறிவு (Compound fracture)**

ஒடிந்த எலும்புக்கும் வெளிக்கும் சம்பந்தமுண்டாக்கும்படி வெளிக்காயம் இருக்கும்.

**சிக்கலான முறிவு (Complicated fracture)**

எலும்பு முறிவோடு சம்பந்தப்பட்ட எலும்பின் ரத்தக் குழாய்கள், நரம்புகள், கணுக்கள், உள்உறுப்புகள் சேதமடைந்து இருப்பது,

**நொறுக்கப்பட்ட முறிவு (Comminuted fracture)**

எலும்பு பல சிறு துண்டுகளாக ஒடிந்து விடுவது. ஒடிந்த எலும்பின் ஒரு பாகம்

இன்னொரு பாகத்துடன் மாட்டிக்கொண்டு அசையாமல் இருப்பது (Impacted fracture)

**பச்சை எலும்பு முறிவு (Green-stick fracture)**

சிறு பிள்ளைகளின் எலும்பு வளையும் தன்மையுடையது. ஆதலால் இந்த முறை முறிவு ஏற்படும். பெரும்பாலான முறிவுகளில் எலும்பு குறுக்களவில் முழுவதுமாக ஒடியாது.

**தானுக்வே முறிவது (Sponataneous fracture)**

நோய் பிடித்த நிலையிலிருக்கும் எலும்புகள் முறிவதற்கு வேண்டிய வெளிச் சக்தி இல்லாமல் தானுகவே முறிந்துவிடும்.

**கணிப்பு**

கேள்வித் தேர்வின்போது எவ்வாறு விபத்து நேர்ந்தது ''சடக்'' என்று சப்தம் கேட்டதா என்பதை வைத்து ஓரளவு ஊகிக்க முடியும். ஒடிந்த இடத்தில் நோவு இருக்கும், முறிந்த எலும்பின் அவயவம் தன் செயலை இழந்துவிடும், பார்வைத் தேர்வின்போது உறுப்புகளின்தோற்றத்தில் மாறுதல் காணப்படும். நீண்ட எலும்புகளில்தான் இது விசேஷமாகக் காணப்படும். இது முரட்டுத்தனமாக எலும்பைத்திருக்கி ஒடிக்கும்போது, தசைகள் சுருங்கி முறிந்த எலும்பைசுருக்கத்திற்கேற்ப இழுப்பதாலும் இந்த ''தோற்றம் மாறுதல்'' ஏற்படும். தகுந்த சிகிச்சை அளிக்காவிட்டால் சேதமடைந்த பாகம் அந்தசொரூப நிலையிலேயே இருந்துவிடும். சில சமயங்களில் முறிந்த எலும்பு ஒன்றின் மேல் ஒன்று ஏறிக் கொள்வதினுல் உறுப்பு குட்டையாகி விடலாம், அல்லது முறிந்த ஒரு துண்டு ஒரு பக்கமாக விலகி விடலாம். அல்லது முறிந்த பாகம் வளைந்து கோணவடிவமாகத் தோன்றலாம், அல்லது ஒரு துண்டு புரண்டு கிடக்கலாம். சாதாரணமாக நளகம் (Tibia) சரம் (Fibula) எலும்புகள் ஒடிந்தால் பாதத்தின் வெளியே பக்க திசையாக திரும்பி நீட்டிக்கொண்டிருக்க (facing outwards) முழங்கால் சில் (patella) முன்னே பார்த்துக் (farwards) கொண்டிருக்கும்.

காயக்குறிகளிலிருந்தும் கணிக்கலாம். பெரும்பாலும் நேரடிபடும்போதுதான் இது அதிகமாகக் காணும். தோல் வழிதல், கிழிதல் அல்லது இடம் துன்னி சிவந்து வீங்கி இருக்கும்.

முறிவு ஏற்பட்ட இடத்தில்இயற்கைக்கு மாருக இடம் அசையக்கூடும். சில சமயங்களில் இந்த அசைவு இல்லாதிருக்கலாம். முறிந்த எலும்பின் முனைகள் ஒன்ருேடொன்று மாட்டிக் கொண்டாலோ அல்லது துரிதமாக வீக்கம் ஏற்பட்டால்தசையானது ஒடிந்த எலும்பை அழுத்திக் கொள்ளும். அதனுல் இந்த அசைவு தோன்ருமல் இருக்கும். குழந்தைகளுக்கு ஏற்படும்எலும்பு முறிவுகளிலும் பெரும்பாலும் இந்த அசைவு தென்படுவதில்லை.

முறிந்த பாகங்கள் ஒன்ருேடொன்று மாட்டிக்கொள்ளாது, முறிந்த பாகம் சமீபத்திலிருந்தால் ''உரசல் சப்தம்'' (crepitus) கேட்கும்.

ஒளி ஊடுருவுக் கதிர்ப்படத்தின் (X-ray) மூலம் இதை அறுதியிட்டு அறியலாம்.

**சிக்கல்கள்**

எலும்பு முறிவினுல் பலருக்கு அதிர்ச்சி ஏற்படலாம். எலும்பு துண்டுதுண்டாய் நொறுங்கும்போது முறிந்த எலும்பின் நடுக்கால்வாயிலுள்ள கொழுப்பு இரத்தக் குழாயினுள் இரத்த சுற்ருேட்டத்துடன் கலந்துவிடுவது உண்டு. இதனுல் நோயாளி பிழைப்பது அரிது.

காயத்திலிருந்து குருதி அளவுக்கதிகமாக வெளியேறினுல் சிலருக்கு காய்ச்சல் ஏற்படும்.

**ஜன்னி**

இது 3 நிலைகளாகப் பிரிக்கப்படும்.

(a) முதலில் மூன்ரும் நாள் தூக்கம் இல்லாமை, முணுமுணுத்தல், உணவில் வெறுப்பு, மலக்கட்டு, கைகால் நடுக்கம் ஏற்படும். நாடி படபடத்து ஓடும்.

(b) இரண்டாம் நிலையில் நோயாளி மனநோயால் பீடிக்கப்படுவான் தன்னையோ பிறரையோ அடித்தல், படுக்கையைவிட்டு

எழுந்து நன்னிலையில் உள்ளவர்களைப்போல் நடந்து திரிதல் ஆகிய குறிகுணங்கள் காணப்படும்

(c) இந்நிலையில் தளர்ச்சியும்சோர்வும் ஏற்படும், அதிக களைப்படைந்தவனைப்போல் காணப்படுவான். உடல் அனல் அதிகமாக இருக்கும். இந்த நிலையை அடைந்தால் நோயாளி பிழைப்பது அசாத்தியம்.

**தவருக முறிவு கூடுதல்**

முதலிலேயே சரியானபடி முறிவைப் பொருத்தி வைக்கத் தவறிவிடுதல், நோயாளி ஜன்னி அல்லது பிறகாரணங்களினுல் சேர்ந்த இடத்தை அசைத்து நிலைபெயரச்செய்தல், எலும்பு சிறுசிறு துண்டுகளாக நொறுங்கி விடுவதால் சரியாக பொருந்தவைக்க முடியாமல், போய்விடுதல் ஆகியகாரணங்களால் இந்த நிலை ஏற்படும். இந்த நிலையில் ஒட்டிய பாகத்தை பழைய படி பிரித்து கட்ட வேண்டும்.

**கூடாமை (non–union)**

முறிந்த எலும்புகள் சேராமல் இருப்பதற்கு கீழ்க்கண்டவைகள் காரணங்களாக இருக்கும்,

(a) **நார்நிசு இணைப்பு** (Fibrous union) எலும்பின் இரு முனைகளையும் நார்வஸ்து சுற்றிக் கொண்டிருக்கும் முனைகளின் நடுவில் தசை, நார்வஸ்து போன்றவை குறுக்கிட்டு கொண்டிருக்கும்,

(b) **பொய் இணைப்பு** (Pseudo-arthrosis) எலும்பு முனைகள் உருண்டை வடிவமாய் இருக்கும். அவற்றின் மேல் சிறிது குறுத்தெலும்பு இருக்கலாம். சுற்றி இருக்கும் இணைவஸ்து ஒரு உறைபோல் இந்த இரு எலும்பு முனைகளையும் சூழ்ந்து இருக்கும். இதற்குள் உள் உறை உண்டாகும். இந்த உறைக்குள் நீரும் உண்டாகலாம் இந்த விதமாக ஒரு பொய் பொருத்து ஏற்படலாம், பொதுவாக புய என்பு, ஆரை என்பு, காரை என்பு, போன்றவைகளில் இது ஏற்படுவதுண்டு.

(c) **முற்றும் பொருந்தாமை** (absolute non-union) எலும்பின் முனைகள் தேய்ந்த (Atrophy) முனையுள்ளவையாகவும் ஒன்றுக்கொன்று அதிக தூரத்திலும் இருக்கும் போதும் இந்த நிலை ஏற்படும், இதற்கு கீழ் கண்டவைகள் காரணங்களாகக் கருதப்படுகிறது.

வயோதிகம், கிரந்தி, மேக நோய், நீரழிவு, நரம்பு நோய்கள், எலும்பு முனை அழிவு (necrosis), இரத்தக் குறைவு, முனைகளின் நடுவில் தசை நிவிருதி போன்றவை குறுக்கிடுதல் (உதாரணம் முழங்கால்சில் முறிவு) எலும்பு புற்று, கழலைகள், இவைகளால் ஒடிந்த எலும்புகள் முற்றும்பொருந்தாத நிலையை அடையும்,

இதற்கு அறுவை சிகிச்சையே பெரிதும் பயன்படும்;

**(d) தாமத இணைப்பு (Delayed union)**

இது மேற் குறிப்பிட்ட நோய்கள், உடல் வன்மைக் குறைவு, வயோதிகம் ஆகியவற்ருல் ஏற்படும், இதைத் தீர்க்க நல்ல சத்துள்ள ஆகாரம் கொடுக்கலாம், முறிந்த இடத்தின்மேல் ரப்பர் கட்டு போடலாம்,

**(e) தசை அழற்சி (Myositis)**

எலும்பைச் சூழும் தசைகளுக்குள் இரத்தம் பெருகி தசை நார்கள் (muscular fibres) ஒன்றோடொன்று பின்னிக் கொள்வதனுல் இது ஏற்படும். இதனுல் தசை சற்று கடினமாக காணப்படும். இதற்குக் காரணம் அதிக நாட்கள் ஒரு இடம் சிம்பினுல் கட்டப்பட்டிருக்கும்போது இரத்த ஓட்டம் அந்த இடத்தில்தடைபட்டு தசை கடினமாகிச் சுருங்குவதே யாகும். இதைத் தவிர்க்க அந்த இடத்தில் தொக்கணம் கொடுக்க வேண்டும்.

**பொதுப்பரிகாரம்**

**பொருந்த வைத்தல் (Reduction)**

முறிவினுல் எலும்புகள் விலகல் அல்லது நிலைபெயர்தல் ஏற்படும்போது எலும்பு இந்த நிலையில் கூடினுல் உறுப்புக் கோணுதலும், அது தன் இயற்கைத் தொழிலைச் செய்ய முடியாத நிலையும் ஏற்படும். இதைத் தவிர்க்க முறிவைச் சரிப்படுத்தி எலும்பின் உடைந்த பாகத்தின் முனைகளை திருத்தி பொருத்த வைக்க வேண்டும். முறிவு ஏற்பட்டபின் எவ்வளவு

சீக்கிரம் பொருந்த வைக்க முடியுமோ அவ்வளவு சீக்கிரம் செய்ய வேண்டும். இல்லாவிட்டால் வடிநீர் வஸ்து நிரம்பி வந்து, கடினமாகி பொருந்த வைக்க தடை ஏற்படும்.

காயத்தால் மிக்க வீக்கமாக இருக்கும் போது இழுத்துச் சரிபடுத்துவதை சில நாட்கள் கழித்துச் செய்ய வேண்டும். தொடை எலும்பு போன்ற நீண்ட எலும்புகள் முறியும்போது அவ்வுறுப்பை இழுத்துக்கட்டி பல நாட்கள் அந்நிலை யிலேயே வைத்திருக்க வேண்டும் கட்டு வதற்கு மூங்கில் துண்டுகளையும், துணியை யும் பயன்படுத்தலாம், தற்காலத்தில் பிளாஸ்திரி போடுகிறுர்கள்; எலும்புகளும் உறுப்புகளும் சுருங்காமல் இருக்கும் பொருட்டு கம்பி போட்டு இழுப்பதும்; சிறு எடைகளைத் தொங்க போடுவதும் உண்டு; இந்த முறை எலும்புகளைப் பொறுத்து மாறும்.

### அசையா நிலையில்வைத்தல் (Fixation)

எலும்பின் வகைகளையும், முறிவின் தன்மையையும் பொருத்து இரும்பு கம்பி வலைகள், மூங்கில் துண்டுகள், தப்பைகள் இவற்றுல் கட்டி அசையாது இருக்கச் செய்ய வேண்டும். இப்படிச் செய்வதால் அந்த இடத்தில் ரத்த ஓட்டம் நன்ருக பாயும்; அதனுல் முறிவு சீக்கிரம் சேரும். ஆனுல் உறுப்பு மெலிவு (atrophy) ஏற்படலாம்; இதை முறிவு கூடிய பின் எளிய பயிற்சி செய்து சரி செய்து கொள்ளலாம்;

### தடவுதல் (Massage)

எலும்பு சேர்ந்த இடம் திரும்பவும் விலகி நிலைபெயர்ந்து விடாது என்ற நிலை வந்ததும் இந்த சிகிச்சையைச் செய்யலாம்; தடலசடாமாஞ்சில், உளுந்து தைலம், சிவப்பு குச்கில்தைலம் போன்ற தைலங்களை பயன்படுத்தலாம், (உருவிவிடும் போது மெதுவாகவலி இன்றி செய்ய வேண்டும்), நோவு, தசை இழுப்பு (Spasm) குறையும், தசைகள் வன்மையாகும்.

சேதப்பட்டிருக்கும் இடத்தை சவுக் காரம், திரிபலா சேர்ந்த நீர் போன்ற வற்றுல் நன்கு கழுவி சுத்தம் செய்ய வேண்டும். காயம் ஏற்பட்டிருக்கும் போது ஈர்ப்புக் கிருமிகள் (Tetanus) தாக்க ஏதுவாகும். அதனுல் இதற்குரிய தடுப்பு மருந்தை உபயோகிக்கலாம். உறுப்பு மிகவும் நசிந்து அவற்றைச் சீர்படுத்த முடியாத நிலை இருந்தாலும், அந்த இடத் தைப் போஷிக்கும் இரத்தக் குழாய். நரம்புத்தண்டு இவைகள் அழிந்து போயி-ருந்தாலும், எலும்பு நெருங்கி துண்டுபட்டு திரும்பச் சரிபடுத்த முடியாது என்று தெரிந் தாலும் சேதமடைந்த உறுப்புகளை அறுவை செய்து அகற்றி விடவேண்டும்.

கட்டுப்போடப்பட்ட இடத்தை 2 நாட்களுக்கு ஒருமுறை அவிழ்த்து புதிதாக தைலம் தடவி கட்டுப்போடவேண்டும்.

---

